# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்ருகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட் காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண் டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப் பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்ருெரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரி யாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத் தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட் டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப்பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றுண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள், முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

*சிற்ப அளவு முறைகள் :* ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

*சிற்பங்கள் :* விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையைன ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

*ஆழ்வார்கள் :* தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

*வைதீகச் சடங்குகள் :* அஷ்டதஸ சம்ஸகாரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

*கலைகள் :* இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப்பட் டுள்ளது. நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம்பெற்றுள்ளன. குண்ட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக்கூறும்.

*அனுமதி நேரம்:* காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

*அனுமதிக் கட்டணம்:* பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.



ப்ரபன்னபாரிஜாதாய தோத்ரவேத்ரைகபாணயே ।

ஞானமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருததுஹே நம: ॥

[சரணமடைந்தவர்களுக்குக் கற்பக மரம் போன்றிருப்பவனும், பசுவை ஓட்டுவதற்கு ஒரு கையில் பிரம்பைப் பிடித்திருப்பவனும், கீதை என்னும் அமிர்தத்தைக் கறந்தவனும், சின் முத்திரை தாங்கியிருப்பவனும் ஆகிய கண்ணனுக்கு வணக்கம்.]

-தியான சுலோகங்கள் - 3

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.



**15-11-98** முதல் **24-11-98** வரை

# வருடாந்திர பிரம்மோத்ஸவம்

நிகழ்ச்சி நிரல்

| நாள் | கிழமை | பகல் உத்ஸவங்கள் | இரவு உத்ஸவங்கள் |
|---|---|---|---|
| 15-11-98 | ஞாயிறு | | சேனாதிபதி உத்ஸவம் அங்குரார்ப்பணம் |
| 16-11-98 | திங்கள் | திருச்சி உத்ஸவம், துவஜாரோஹணம் | சிறிய சேஷவாகனம் |
| 17-11-98 | செவ்வாய் | பெரிய சேஷ வாகனம் | அம்ச வாகனம் |
| 18-11-98 | புதன் | முத்துப்பந்தல் வாகனம் | சிம்ம வாகனம் |
| 19-11-98 | வியாழன் | கல்ப விருக்ஷ வாகனம் | அனுமன் வாகனம் |
| 20-11-98 | வெள்ளி | பல்லக்கு உத்ஸவம், மாலை: வஸந்தோத்ஸவம் | யானை வாகனம் |
| 21-11-98 | சனி | சர்வ பூபால வாகனம் | கருட சேவை |
| 22-11-98 | ஞாயிறு | சூர்யப்பிரபை வாகனம் | சந்திரப்பிரபை வாகனம் |
| 23-11-98 | திங்கள் | திருத்தேர் | குதிரை வாகனம் |
| 24-11-98 | செவ்வாய் | பல்லக்கு உத்ஸவம், சக்ரஸ்நானம் | துவஜாவரோஹணம். |

15-11-98 ஞாயிறு அன்று ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு இலட்ச குங்குமார்ச்சனை நடைபெறும். ரூ. 1116/--ஐ கட்டணமாகச் செலுத்தி தம்பதியர்கள் இந்த குங்குமார்ச்சனையில் பங்குபெறலாம்.




*வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்*
*வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்*

மலர் 29 நவம்பர் – 1998 இதழ் 6

சிறப்பாசிரியர் :
**திரு. எம்.கே.ஆர். விநாயக்,** ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

❋ ❋ ❋

ஆசிரியர் :
**திரு. என்.எஸ். ராமமூர்த்தி,** எம்.ஏ.,

❋ ❋ ❋

துணை ஆசிரியர் :
**திரு. வ.கோ. சொக்கலிங்கம்,** எம்.ஏ.,

❋ ❋ ❋

அச்சிடுபவர் :
**திரு. எம். லக்ஷ்மண் ராவ்,**
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

❋ ❋ ❋

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati
Phone : 22294

❋ ❋ ❋

தனிப்பிரதி ரூ. 4/-
வருடச்சந்தா ரூ. 48/-

உள்ளுறை — பக்கம்





**அட்டைப்பட விளக்கம்**

முன் அட்டை : ஸ்ரீபத்மாவதி தாயார்
பின் அட்டை : ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில் - திருச்சானூர்.

## உங்களுடன்....

"உலகம் பொல்லாதது அது யார் தடுப்பினும் நில்லாதது" உலகமா பொல்லாதது? இல்லையில்லை! உலகில் வாழும் உயிரினங்கள்தான் பொல்லாதது. உயிரினங்களா அது? எதெது! ஓரறிவுடைய எறும்புமுதல் ஆறறிவுடைய மனிதன் வரை உள்ள அனைத்தும் உயிரினங்களே. அவற்றுள் ஓரறிவிலிருந்து ஐந்தறிவு வரை உள்ள உயிரினங்கள் தான் செய்வது தனக்குத் தெரியாமலே சில தவறுகளைச் செய்து வருகின்றன. ஆனால் ஆறறிவுடைய மனித இனம் தான் செய்வதெல்லாம் அறிந்தும் அறியாது போல். தெரிந்தும் தெரியாதுபோல் புரிந்தும் புரியாது போல் பல தவறுகளைப் புரிந்து வருகிறது.

மண்ணுயிரையும் தன்னுயிர் போல் கருத வேண்டியவன் இப்பகுத்தறிவுள்ள மனிதன். அவ்வாறு அவன் கருதுகிருனா? இல்லையே. உயிர் கொலை அல்லவோ செய்கிருன். அஹிம்சையை மேற்கொள்ள வேண்டிய மனிதன் ஹிம்சை அல்லவோ மேற்கொள்கிருன். அது மட்டுமா காம, குரோத, மோக, லோப, மத, மாச்சர்யங்களைத் தன்னகத்தே கொண்டு பெருமை மிகுந்த மனித இனத்திற்கே அல்லவா களங்கத்தைக் கற்பிக்கிருன். தான் கெடினும் தன்னைச் சுற்றியுள்ளவர்கள் கெடக்கூடாது எனும் எண்ணம் ஒரு கடுகளவும் இல்லாமல் தனக்கு ஒரு கண் போனாலும் பரவாயில்லை பக்கத்தில் உள்ளவனுக்கு இரு கண் போகவேண்டும் என்று அல்லவா வேண்டிக்கொள்கிருன். துயரக்கடலில் வீழ்ந்து தள்ளாடிக்கொண்டிருப்பவனுக்குத் தக்க ஆலோசனை வழங்கி ஆறுதல் கூறுவதை விடுத்து அங்கே தவிக்கும் ஆத்மாவைப் பார்த்து ஏளனம் அல்லவா செய்கிருன். நல்லதை செய்யாவிடினும் அல்லதையாவது செய்யாதிருக்கலாமல்லவா!

மனிதப்பிறவி மிகவும் அதிர்ஷ்டமான மேலான பிறவி. மற்ற பிறவிகள் எடுத்தால் மோக்ஷம் அடைவது கடினம். முடியாதும் கூட. மனிதப்பிறவியில் மோக்ஷத்தில் ஆசை வைத்தால் போதும் அவன் முமுக்ஷு ஆவது திண்ணம். மனித ஜீவாத்மாவிற்கும் மேலான பரமாத்மாவிற்கும்தான் இவ்வுலகில்நெருங்கிய தொடர்பு உள்ளது. இவற்றை மனிதனுக்கு உணர்த்துவதற்காகவே இறையவதாரங்கள் மனித உருவில் வந்தன; மக்களுக்கெல்லாம் ஓர் படிப்பினைத் தந்தன. முழுக்க முழுக்க இறையவதாரங்கள் எடுத்தது மனித ஜீவாத்மா நல்வழியடையவதற்காகவேயன்றி மற்ற வாயில்லா ஜீவராசிகளுக்காக அல்ல என்பதை இவ்வுலகம் அறியவேண்டும். ஒவ்வொரு மனித ஜீவாத்மாவும் பரமாத்மாவை அடைவதையே குறிக்கோளாக கொள்ளவேண்டும். அதோடு மாறி மாறிப் பல பிறவி எடுப்பதை தவிர்க்க இம்மனிதப் பிறவியால் மட்டுமே முடியும்.

எனவே இப்பிறவியை கடைசிப் பிறவியாக ஆக்கிக்கொள்ள ஒவ்வொரு மனிதனும் முன்வரவேண்டும். காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள முயலவேண்டும். நாடி நரம்பு நன்ருக உள்ளபோது உழைக்காமல் நாடித்தளர்ந்த நிலையில் உழைக்க எண்ணுவதும் கடினம். அதுபோலவே இளமையாக இருக்கும்போதே இறைநம்பிக்கையை மனதில் வளர்த்துக் கொண்டு இறையவதாரங்களின் இன்றி-

யமையாமையை அறிந்து உய்ந்து போவதற்கு உள்ளத்தில் ஒரு இடத்தை இன்றே ஒதுக்கி வைக்கவேண்டும். அது ஒருநாளைக்கு நிச்சயம் பயனைத்தரும்.

நாம் இறைவழிபாட்டை எளிமையாகவே நடத்தலாம். கர்ம, ஞான, பக்தி யோகங்களில் மூழ்க வேண்டியதுமில்லை. ஆத்மஞானத்தைப் பெற ரிஷிகளைப் போன்று அல்லல்படவும் தேவையில்லை. சாதாரண சம்சாரிகளாய் வாழ்ந்தாலும் பிரபன்னர்களாக இருந்தால்போதும். அது எப்படி? கைங்கர்யமாகிற உபேயத்தை - பலனை அடைவதற்கு ஜபம், ஓமம், யோகங்கள் முதலியன செய்வது உபாயம் ஆகாது என்பதை அறிந்து, மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான் என்பதைப் போல எம்பெருமானையே உபாயமாகப் பற்றுதல் வேண்டும். அதாவது தந்தையா-னவன் தன்னுடைய மகனுக்கு பொருள் ஸ்தானத்திலும் பணம் ஸ்தானத்திலும் அவனே இருந்து மகனுடைய ஆசையை நிறைவேற்றுவது போல் எனலாம். எனவே எம்பெருமானை உபாய உபேயம் என்னும் பிரபன்னர்கள் சிறந்த ஞானிகளாகவே கருதப்படுகின்றனர்.

மனிதன் தன்னுடைய சுயநலத்திற்காக பொதுநலத்தை நாசம் செய்கிறுன். தன் சுகத்திற்காகப் பிறருடைய சுகத்தைத் தட்டிப் பறிக்கிறுன். நிலையில்லாச் சொத்தைச் சேர்ப்பதற்காக நிலைச்சொத்தான ஆத்மாவை அல்லலுறச் செய்கி-றுன். பழுத்த கனி இருக்க பச்சைக் காயைப் புசிப்பது போன்று மேன்மையான பேரின்பம் பக்கத்தில் இருக்க அங்கிங்கும் அலைந்து ஓடி சிற்றின்பத்தை நுகர்ந்து கொண்டிருக்கிறுன் இந்த நரன். நரன் நாராயணனிடம் சேர்வது எப்போது? அவன் சேர்வதற்கு என்னென்ன வழிகள் உள்ளன? அவன் அதற்கு செய்ய வேண்டுவன யாவை? அவனுடைய கடமைகள் யாது? என்பனபோன்ற கேள்விக்கணைகளுக்கு பதிலாக அமைந்துள்ளதுதான் எம்பெருமான் ஸ்ரீகிருஷ்ணன் அருளிச்செய்துள்ள ஸ்ரீமத்பகவத் கீதையாகும்.

கீதையைக் கண்டு யாரும் பயம் கொள்ளத் தேவையில்லை. கீதை ஒரு புனித நூல். அது இருள் அகற்றி வெளிச்சத்தை அளிக்கும் தீப விளக்கு. அது ஒரு வாழ்க்கை வழிகாட்டி. இதை ஒவ்வொரு இந்துவும் வைத்திருக்க வேண்டிய பாட்டன் சொத்து. அழியா சொத்து. சொத்துதானே என்று அதைச் சும்மா வைத்திருக்காமல் தினமும் வாசித்துப் பொழுதுபோக்கவேண்டும். அப்படி உலகில் கீதையை வாசிப்பவர்கள் எத்தனைப்பேர் உள்ளனர் என்றுல் அவர்கள் மிக மிகக் குறைவே. அப்படி வாசித்தாலும் அதை ஜீரணிப்பவர்கள் அதைவிடக் குறைவே. காரணம் கீதையில் உள்ளனவற்றை வெறும் தத்வார்த்தங்கள் என்று அதைக் கடைபிடிப்பதில்லை. ஆனால் அது ஒவ்வொரு மனிதனின் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான வாழ்க்கைத் தத்துவம் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். அதைப் புரிந்து கொண்டால் அவர்கள் ஞானியாகாவிட்டாலும் மனிதர்களாக விளங்குவார்கள் என்பது திண்ணம்.

நாளும் எழும் பிரச்சனைகளுக்கும், போராட்டங்களுக்கும், மனப்போர்களுக்கும் நல்லதொரு தீர்வுக்கான அருமருந்தாக கீதையை பயன்படுத்தி, அவ்வழியில் நின்று வாழ்ந்து காட்டி மட்டில்லா மகிழ்ச்சியினை அடைவோமாக. அவற்றிற்கு அக் கோதைநாயகனான கீதைநாயகன் அருள்புரிவானாகுக.



## செய்திச் சுருக்கம்

### திருமலையில் பிரம்மோத்ஸவம்

அ கலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை உறை மார்பனான திரு வேங்கடமுடையானுக்கு வழி வழியாக திருவோணத்திருவிழா சம்பிரதாய முறைப்படியும் வைகானசாகம முறைப்படியும் வெகு விமர்சையாக இந்த வெகு தான்ய ஆண்டிலும் 22-9-98 செவ்வாய்க்கிழமை அன்று அங் குரார்ப்பணத்தோடு தொடக் கமானது. இத்திருவிழாவிற் கெனத் திருமலை முழுவதும் மின் விளக்கினாலும், வழிநெ டுகிலும் வரவேற்பு தோரணங்க ளாலும், மலர்களாலும், அலங் கரிக்கப்பட்டு திருமலை சொர்க் கமயமாக்கப்பட்டிருந்தது.

இப்பத்து நாட்கள் நடந்த திருவிழாவில் ஒருபுறம் திரும லையப்பனின் திருவீதிவலமும், மறுபுறம் மூலமூர்த்தியின் தரி சனமும், இன்னொருபுறம் பக் தகோடிகள் சுவாமி புஷ்கரி ணியில் நீராட்டமும், மற்றொரு புறம் தலைமுடி காணிக்கை அளித்தலும், ஒரு இடத் தில் அன்னதானமும், மற்றொரு இடத்தில் ஆஸ்தான மண்ட பத்தில் அறநெறி கருத்துரைக ளும், இசைக்கச்சேரிகளும், நாட கங்களும், ஹரிகதைகளும், இன் னொரு புறம் வேதபாராயணங் களும், திவ்யப் பிரபந்த பாரா யணங்களும், எங்கு காணினும் பக்தர்களின் கூட்டமும் அவர்க ளின் கோவிந்தநாம கோஷமும் எங்கும் நிறைந்திட திருமலை யானது மனதிற்கு அமைதியை யும் சந்தோஷத்தையும் அளித் தன.



### திறப்பு விழா

27-9-98 அன்று திரு மலைக்கு கருடோத்ஸவததை முன் னிட்டு வந்திருந்த ஆந்திர மாநில முதல்வர் திரு. நாரா. சந்திரபாபு நாயுடு அவர்கள் பல திறப்பு விழா நிகழ்ச் சிகளில் கலந்து கொண்டார்.

திருமலையான் அரும்பொருட் காட்சியகம், திருமலையான கல்யாண வைபவோத்ஸவ மண்டபம் முதலானவற்றை முதல்வர் திறந்து வைத்தார். அவருடன் அறநிலை யத்துறை அமைச்சர் திரு. சிம்மாத்ரி சத்யநாராயணா, பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் திரு. கலிதிண்டி ராமச் சந்திரராஜு, செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். வினாயக் மற்றும் பல அமைச்சர்கள், சட்டமன்ற உறுப் பினர்கள், தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள் பலரும் இருந்தனர்.

### அங்குரார்ப்பணம்

22-9-98 செவ்வாய் அன்று மாலை 7 மணி முதல் 8 மணி வரை விஷ்வக்சேனர் எனும் சேனை முதலியார் பூஜை தொடககமாக அங்குரார்ப்பணம் அழகாக நடந்தது.

### த்வஜாரோஹணம்

23-9-98 புதன் அன்று மாலை திருமலைத் திருக்கோயிலில் பிரம்மோத்ஸவம் தொடர்பான ஹோமங்களை நடத்தி கருடன் கொடி நாட்டப்பட்டது.

பின்னர் சகல அணிகலன்கள் அணிவிக்கப்பட்ட ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீமலையப் பசுவாமியின் அருகாமையில், தலைமை அர்ச்சகர் திரு. மாடம் பாகம் ஸ்ரீனிவாச பட்டாசாரியுலு தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே. ஆர். விநாயக் தம்பதியர்களிடம் அர்ச்சனை செய்வித்து பிரம்மோத்ஸவத்திற்காக அவருக்கு கங்கண கயிற்றை கட்டினார். பின்னர் திருமலை திருவீதிகளில் திருமலையப்பன சுதர்ஸன், அனந்த, கருட, விஷ்வகசேனர் முதலான பரிவாரங்களுடன் கருட துவஜ படங்களுடன் திருவீதி வலம் வநது அஷ்ட திக்பாலகர்களை வரவேற்றுர். உதஸவத்தின் பிறகு சரியாக 6-50 மணிக்கு திருக கோயில தங்க துவஜஸ்தம்பத தின் மேல் பூஜை செய்தபிறகு கருடன் கொடியை பறக்கவிடப் பட்டது. இநத துவஜாரோஹண நிகழ்ச்சியில் செயலாட்சித்தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள், இணைச்செயலாட்சித் தலைவர் திரு. பால சுப்ரமணியம், பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள் திரு. மகாதேவநாயுடு, திரு. ராதகி



ருஷ்ணமராஜு மற்றும்பல உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர். அதன் பின்னர் அன்றிரவு 10 மணிக்கு பெரிய சேஷ வாகனத்தில் மலையப்பன் திருவீதி வலம்வர, ஸ்ரீதேவி, பூதேவி சமேத திருமலையப்பனை பக்தகோடிகள் பணிந்து வணங்கி பரவசமடைந்தனர்.

இவ்வாருக, பெரிய சேஷவாகனத்தில் தொடக்கமான பிரம்மோத்ஸவம் செப்டம்பர் 24-ஆம் நாள் காலை சிறிய சேஷ வாகனத்திலும் அன்றிரவு அம்சவாகனத்திலும், 25-ஆம் நாள் காலை சிம்ம வாகனத்திலும் அன்றிரவு முத்துப்பந்தல் வாகனத்திலும், 26-ஆம் நாள் காலை கல்பவிருக்ஷ வாகனத்திலும், அன்றிரவு சர்வபூபால வாகனத்திலும், 27- ஆம் நாள் காலை மோகினி அவதாரத்திலும் திருமலையப்பன் காட்சியளித்தார். அன்றிரவு நடந்த கருடோத்ஸவ வைபவத்தை எப்படி வர்ணித்தாலும் அது மிகையாகாது.



### முன்னாள் குடியரசுத் தலைவர் நன்கொடை

பாரத முன்னாள் குடியரசுத்தலைவர் டாக்டர். சங்கர்தயாள் சர்மா அவர்கள் திருமலையான் பிரம்மோத்ஸவத்தில் கலந்து கொண்டார். அதுபோது அவர் ஸ்ரீவேங்கடேஸ்வரா நித்திய அன்னதான திட்டத்திற்கு ரூ. 5 இலட்சம் நன்கொடையாக வழங்கினார்.

### அரசு அளித்த பட்டாடை

பிரம்மோத்ஸவத்தில் சிறப்பாக நடக்கும் திருமலையப்பன் கருடோத்ஸவத்தின் போது ஆந்திர மாநில முதல்வர் திரு. நாரா. சந்திரபாபு நாயுடு அவர்கள் ஆந்திர அரசு சார்பில், பட்டாடையை அளித்தார். திருமலை சுவாமி சந்நிதித் தெருவில் வீற்றிருக்கும் ஸ்ரீபேடி ஆஞ்சநேயர் ஸ்வாமி ஆலயத்திலிருந்து சம்பரதாய முறைப்படி சாமரங்கள் வீச யானை, குதிரை, எருது முதலானவைகள் முன்னே நடந்து செல்ல வேதமந்திரங்கள் முழங்க நடுவில் மாநில முதல்வர், தலைமீது வெள்ளித்தட்டில் பட்டாடையை வைத்துக் கொண்டு பக்திப் பரவசத்தோடு திருவீதி வலம் வந்து திருக்கோயிலில் திருமலையப்பனுக்கு சமரப்பித்தார்.

### கருட சேவை

27-9-98 அன்று இரவு 7 மணிக்கு திருமலையப்பன் மூலமூர்த்திக்கு அணிவிக்கப்படும் மகர கழுத்தணியையும், இன்னும் எத்தனையோ அணிகலன்களையும் அணிந்து கொண்டு தங்க கருடன் மேல் அமர்ந்து, சென்னையிலிருந்து வந்த புதிய கோயில் குடைகளை வைத்துக்கொண்டு, ஒரு நாள் முன்பாக கொண்டுவரப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூர் கோதாதேவி - ஆண்டாள் சூட்டிய மாலையை அணிந்துகொண்டு திருமலை திருவீதிகளில் ரதம், யானைகள், குதிரைகள், எருதுகள், பக்தகோடிகள் புடைசூழ வைபவமாக திருவீதி வலம் வந்தார். 4 மணி காலம் நடைபெற்ற இந்த சேவையை தரிசிக்க 4 இலட்சத்திற்கும் மேற்பட்ட பக்தர்கள் திருமலைக்கு வந்திருந்தனர்.

மறுதினம் 28-9-98 காலை அனுமன் வாகனத்திலும் மாலை தங்கத்தேரிலும், இரவு யானை வாகனத்திலும் திருமலையான் திருவீதிவலம் வந்தார். 29-9-98 அன்று காலை சூர்யபிரபை வாகனத்திலும் இரவு சந்திர பிரபை வாகனத்திலும் திருவீதிவலம் வந்த வேங்கடவனை பக்தர்கள் வணங்கினர்.



திருத்தேர்

30-9-98 அன்று ஸ்ரீதேவி, பூதேவி சமேதமாக ஸ்ரீநிவாஸனை திருத்தேரில் திருவீதி வலமாக கொண்டுவரப்பட்டார். கோவிந்தா! கோவிந்தா! எனும் பக்தகோடிகளின் நாமசங்கீர்த்தனை மத்தியில் சுமார் மூன்று மணி காலம் திருமலை மாடவீதிகளில் திருமலையப்பன் திருவீதிவலம் வந்து பக்தர்களுக்கு தரிசனம் தந்தார்.

அன்றிரவு 9 மணிக்கு குதிரை வாகனத்தில் திருமலையப்பன் ஒருவனே திருவீதி வலம் வந்து அனைவரையும் மகிழ்வித்தார்.



சக்ர ஸ்நானம்

1-10-98 அன்று கடைசியாக விஜயதசமி நன்னாளில் மலையப்பன் அவதரித்த திருவோண நட்சத்திரமான அன்று ஸ்ரீசுதர்ஸன பகவானோடு சேர்ந்து, திருமலையப்பன் தன் தேவிமார்களுடன் கலந்து, திருக கோயில் திருவீதிவலம் வந்து வராஹ சுவாமி கோயில் அடைந்தபின்னர் ஸ்நான திருமஞ்சனம் வைபவமாக நடந்தது.

பின்னர் புனிதமான சுவாமி புஷ்கரிணியில் ஸ்ரீசுதர்ஸன ஆழ்வாருக்கு புனித ஸ்நானம்

நடந்தது. அச்சமயத்தில் ஆயி ரமாயிரம் பக்தர்கள் புஷ்கரிணி யில் கோவிந்தா! என்று கோஷ மிட்டுக் கொண்டு புனித நீரா டினர்.

## பக்தர்களும்-வருவாயும்

திருமலையப்பன் பிரம் மோத்ஸவத்திற்கு சென்ற ஆண்டு 5 இலட்சத்து 60 ஆயிரம் பக்தர்கள் வந்திருந் தனர். இவ்வாண்டு 6 இலட் சத்து 14 ஆயிரம் பக்தர் கள் வந்திருந்து திருமலை யானைத் தரிசித்தனர். அவ் வாறே சென்ற ஆண்டு பிரம் மோத்ஸவ வருவாய் ரூ. 4 கோடியே 31 இலட்சம் வந் தது. இவ்வாண்டு ரூ. 4 கோடியே 41 இலட்சம் வருவாய் வந்தது.

## இலவசத் தேனீர்

வைகுண்டம் 'க்யூ' கட்டி டத்தொகுதி பி.பி. கொட் டகையிலிருந்து திருவேங்க டவனை தரிசிக்கச் செல் லும் பக்தர்களுக்கு செப் டம்பர் 25,26,27 தேதிகளில் டாடா டீ நிறுவனம் இல வசமாக தேனீர் வழங்கி யது. சென்ற ஆண்டும் இதே போல் தேனீர் வழங் கியது.





**பிரம்மோத்ஸவத்தின் போது திருமலையில் திரு. தி.அ. கோபாலாசாரியார் அவர்களால் இசைக்கப் பெற்று தி.தி. தேவஸ்தானம் வெளியிட்டுள்ள நாலாயிர திவ்யப்ரபந்த பாசுரங்கள் அடங்கிய ஒலிப்பேழையினை ஆந்திரமாநில முதல்வர் அவர்களால் 27-9-98 அன்று வெளியிடப்பெற்றது.**



## ஸ்ரீவிஷ்ணு சகஸ்ரநாம பாராயணம்

ஸ்ரீ. உ.வே. ஸ்ரீநிவாஸராகவாச்சாரியார் ஸ்வாமி தலைமையில் பையம்பாடியில் ஸ்ரீவிஷ்ணு சகஸ்ரநாம பாராயணம் சிறப்பாக நடந்தேறியது. மதுராந்தகம் சம்ஸ்கிருத பாடசாலையில் இருக்கும் முதல்வர் ஸ்ரீ உ.வே. சக்ரவர்த்தியார் ஸ்வாமியும், புதுக்கோட்டை சேஷாத்ரியார் ஸ்வாமி மற்றும் பல வித்வான்களும், வித்யார்த்திகளும் வேதம், விஷ்ணு சகஸ்ரநாம பராயணத்தை வெகுச் சிறப்பாக நடத்தி வைத்தனர். வந்திருந்த வித்வான்களுக்கு ஸ்ரீ உ.வே. உத்தமூர் பி.எஸ். வேங்கடவரதாச்சாரியார் ஸ்வாமி சம்பாவனை கொடுத்தார்.



திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## ஸ்ரீ வேங்கடேஸ்வரா

# வன மேம்பாட்டுத் திட்டம்

மனித மனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டஙகளைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத்திட்டம்". இததிட்டத்தினால், திருமலை திருபப்தி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திறகு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்கு பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை : ரூ. 15,000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)

நன்கொடை : ரூ. 5,000

இத்திட்டத்தின் கீழ் திருமலை-திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய் ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ. 2,000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு. நன்கொடை அனுப்புவோர் வங்கி கேட்புக் காசோலையாக அனுப்புதல் வேண்டும்.

<u>கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்</u>

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

# காரமடை அரங்கநாதசுவாமி

திரு. ஆர். ரங்கசாமி - கோவை.

"கொண்டல் வண்ணனைக்
கோவலனாய் வெண்ணெ
யுண்டவாயன் என்னுள்ளம்
கவர்ந்தானை
அண்டர் கோன் அணியரங்கன்
என்னமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக்
காணவே"



என்று அரங்கனைப் பற்றி புகழ் பாடுகிறார் திருப்பாணாழ்வார். அரங்கன் என்றதும் நம் நினைவுக்கு உடனே வருவது திருவரங்கத்தில் அரியணையில் சயனித்திருக்கும் அரங்கநாதர் தான். அதே அளவில் தமிழ் நாட்டில் கொங்கு மண்டலத்தில் புகழ்பெற்ற பழம்பெருந்திருத்தலங்களில் சுயம்புவாகக் காட்சி அளிக்கிறார் காரமடை அரங்கநாதர்.

தமிழ்நாட்டில் கொங்குமண்டலம், கோயமுத்தூர் மாவட்டம், மேட்டுப்பாளையம் வட்டத்தில் அமைந்துள்ள அரங்கநாதர் ஆலயமான வைணவ ஸ்தலம் மிகப்பிரசித்தி பெற்ற ஸ்தலமாகும்.

காரமடை என்ற சிறுநகரில் அமைந்துள்ள இக்கோயில் கோயமுத்தூர் - உதகமண்டலம் நெடுஞ்சாலையில் 28 கி.மீ. வடக்கே அமைந்துள்ளது. காரமடை என்ற ரயில் நிலையமும் ஊரை ஒட்டி கோயமுத்தூர் மேட்டுப்பாளையம் (நீலகிரி) ரயில் பாதையில் ஊரின் மேற்கில் அமைந்துள்ளது.

அருள்தரும் அரங்கநாயகித் தாயாருடன் அருள்மிகு தேவி ஆண்டாளும் உடனாகிய அருள்மிகு அரங்கநாதர் திருக்கோலத்தில் கோயில் கொண்டிருக்கும் இந்த ஊர் காரமடை என்று அழைக்கப்படுவதற்கு காரணம்: ஆதிகாலத்தில் இங்கு காரைப்புதர்கள் சோலைகளாக நிறைந்திருந்ததுடன் ஆங்காங்கு நீர் நிறைந்த மடைகளும் இருந்த காரணத்தால் இந்த ஊரை "காரை மடை" எனப்பெயர் பெற்றது. நாளடைவில் காரைமடை என்ற பெயர் மருவி "காரமடை" எனப்பெயர் பெற்று அதுவே நிலைத்து விட்டது.

முன்னொரு காலத்தில் காரைச்செடிகள் நிறைந்த புதரில் மேயச்சென்ற மாட்டுக் கூட்டத்தில் ஒருகாராம் பசு மட்டும் தப்பிச்சென்று அனுதினமும் காரைப்புதரில் தானே பால் சுரந்துவிட்டு திரும்பிவந்துவிடும் வழக்கமாக இருந்து வந்தது. மாட்டின் பால் மடி குறைந்து வந்ததைக் கண்ட மாட்டின் சொந்தக்காரர் ஒரு நாள் ஒளிந்திருந்து, பால் சுரந்த அந்தக் குறிப்பிட்ட இடத்தில் உள்ள புதரை கோடாலியால் வெட்டிப் பார்த்தபோது புதரிலிருந்து இரத்தம் பீறிட்ட தலையுடன் ஓர் சுயம்பு வடிவம் இருக்கக்கண்டான். பின்னர் அவர் காரணம் அறியாது வீடு திரும்பினார். அன்றிரவு அவர் கனவில் தான் அரங்கநாதர் என்றும் தனக்கு ஓர் கோயில் கட்டி வழிபாடு செய்யுமாறு கூறியதாகவும் கூறப்படுகிறது. அதுவே பின்னர் அரங்கநாதர் ஆலயம் என்று பிரசித்தம் அடைந்ததாகவும் வரலாறு கூறுகிறது. இன்றும் அந்த வெட்டப்பட்ட இடம்

ஓர் வடு சுயம்பு வடிவத்தின் இடது நெற்றியில் மூலவர் அரங்கநாதர் நெற்றியில் ஆழமாகக் காணப்படுகிறது. இந்த தலம் மூலவர் சுயம்பு வடிவானதால் தரை மட்டத்திற்கு கீழ் அமைந்துள்ளது.

இக்கோயில் முக்கிய திருவிழாக்கள்:

1. புரட்டாசி சனிக்கிழமைகள் ஐந்து வாரங்கள் 2. பகல் பத்து இராப்பத்து - ஸ்ரீவைகுண்ட ஏகாதசி 3. மாசிமகத் திருத்தேர் பெருவிழா.

மாசி மகம் பௌர்ணமியன்று காரமடை அரங்கநாத சுவாமி திருத்தேர்விழா வடம் பிடித்ததுடன் ஆரம்பமாகி 12 நாட்கள் மிகச் சிறப்பாக பாஞ்சராத்திர ஆகமத்தின் படி தொன்று தொட்டு இன்றும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

இந்த விழாவிற்கு அருகில் உள்ள கிராமங்களிலிருந்தும் பெருநகரங்களிலிருந்தும் சுற்றுமுள்ள மாவட்டங்களிலிருந்தும் மற்றும் அண்டை மாநிலமான கர்நாடகாவிலிருந்தும் ஏராளமான பக்தர்கள் வருடா வருடம் பல்லாயிரக்கணக்கில் வந்து கலந்து கொள்ளுகிறார்கள்.

இந்த விழா 12 நாட்களுக்கு சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் தேர் வடம் பிடித்தல், முதல்நாளும் அடுத்தநாள் தெப்பத்தேர் என்றும் அதற்கடுத்த மூன்றும் நாள் பாரி வேட்டை என்பவன போன்றவை சிறப்பாக நடந்துவரும் விழாநாட்களாகும். ஏழு நாட்களுக்கு முன்னரே கொடியேற்றும் விழா துவங்கிவிடும்.

இந்நாட்களில் சேவார்த்திகள் அரங்கநாதர் ஆலயத்தில் தண்ணீர் சேவை, பந்தசேவை என்று இரண்டு வகை வழிபாடுகளை செய்வதுடன் கவளம் கொடுத்தல் என்ற இன்னொரு சிறப்பான வழிபாடு வேறு எந்த வைணவத் தலங்களிலும் நடைபெறாத ஓர் வழிபாடாகும். இத்தலத்தில் சேவார்த்திகள் பெரிய நாமங்களை நெற்றியிலும், வயிற்றிலும், முதுகிலும் மற்றும் இரண்டு தோள்பட்டைகளிலும் அணிந்து வெற்று உடம்பில் கச்சை மட்டும் கட்டிக்கொண்டு ஓர் நீளமான பிரம்பை கையில் ஏந்திக் கொண்டு உயர்த்தி பிடித்து குதித்துக் குதித்து கோயிலை சுற்றி ஆடிவரும் காட்சி மிக அற்புதமானது.



மற்றும் சேவார்த்திகள் மான் உரித்தோலை கவசம் போல் அணிந்து சிறிய தோலாலான குவளையில் அருகே உள்ள குளத்திலிருக்கும் நீர் மொண்டு வந்து அரங்கநாதருக்கு அபிஷேகம் செய்துவருகிறார்கள்.

மற்றொரு சேவையாக பந்த சேவை எனும் வழிபாடாகும். துணியிலான பந்தம் இடுப்பில் வைக்கும் அளவுக்குத் தயாரித்து அதை இடுப்பில் வைத்துக்கொண்டு எண்ணெய் அல்லது நெய் ஊற்றி நெருப்பு பற்ற எரியவைத்துக்கொண்டு இடுப்பில் சுமந்து கோவிந்தா கோவிந்தா என்ற அரங்கநாதர் ஆலயத்தின் அருகிலும் ஊர்த் தெருக்களிலும் ஆடிக்கொண்டும் தாரை தப்பட்டை முழங்க மூன்று நாட்கள் விழாவில் கலந்துகொள்கிறார்கள்.

இக்காலங்களில் கோயிலுக்கு வர இயலாத சேவார்த்திகள் தங்கள் தங்கள் ஊர்களிலேயே இந்த விதமான மூன்று சேவைகளையும் நடத்திவருகிறார்கள்.

மற்றொரு சேவையான கவளம் கொடுக்கும் வழிபாடாக இத்தலத்திலும் சுற்றியுள்ள ஊர்களிலும் நடத்திவருகிறார்கள். கவளம் என்பது அபிஷேகம் போன்றதொரு கலவையாகும். அதாவது வாழைப்பழத்தை தோல் உரித்து நான்கைந்து துண்

டுகளாக நறுக்கி அத்துடன் கரும்பு சர்க்கரை, பொட்டுக்க டலை, பேரீச்சம்பழம் ஆகிய வற்றை கலந்து பாத்திரங்களில் வைத்துக் கொண்டு பக்தர்கள் ஆடிக்கொண்டுவரும் சேவார்த்தி கள் வாயில் வைத்து திணிப் பார்கள். இவ்வாறு கொடுக் கும் கவளம் சேவார்த்திகள் எவ் வளவு சாப்பிட்டாலும் அவர்க ளுக்கு எந்தவிதமான பாதிப்பும் ஏற்படுத்துவதில்லை.

இவவாறு கவளங்களை வாயில் வைத்துக்கொண்டு ஆடிவரும் சேவார்த்திகளிடமி ருந்து கல்யாணமாகி நீண்ட நாட்கள் குழந்தை பேறில்லாத பெண்கள் தன்னுடைய முந் தானைகளில் ஏந்தி வாங்கிக் கொண்டு அந்தத் துப்பப்பட்ட கவளங்களை எவ்வித கூச் சமோ சங்கோசமோ இன்றி சாப் பிட்டுவிடுகிறுர்கள். இதனால் அவர்களுக்கு குழந்தை பேறு கிடைப்பதாக நம்பப்படுகிறது. ஆனால் இம்மாதிரியான பழக் கம் தற்போது குறைந்துவிட் டது.

இம்மாதிரியான விழா அரங் கநாதர் திருக்கோயிலில் கொடி யேற்றிய நாளிலிருந்து ஏழு நாட்களுக்கு தொடர்ந்து நடை பெற்றுவருகிறது. நிறைநா ளன்று சேவார்த்திகள் மஞ் சள் நீரில் நனைந்த மஞ்சள் ஆடையை இடுப்பில் அணிந்து உடல் முழுவதும் திருமண் அலங்கரிக்க சங்கு நாதம் தப் பட்டை முழங்க வீடு வீடாக சென்று பக்தர்கள் கொடுக் கும் நிதி காணிக்கையை கோயிலுக்கு கொண்டுவந்து செலுத்தி விடுவார்கள்.

இக்கோயில் வைகுண்ட ஏகா தசியன்று பரமபத சொர்க்க வாசல் திறப்பின்போது பக் தர்கள் மத வேறுபாடின்றி கலந்துகொள்கிறுர்கள். மற் றும் அமாவாசையன்று கோயில் அரங்கநாதருக்கு விசேஷ பூஜை கள் நடைபெற்று வருகின் றன. இககோயிலில் இந்துமத வேத முறைப்படி திருமணங்கள் நடத்தி வைக்கப்படுகின்றன.

இக்கலியுகத்திலும் காரமடை அரங்கநாதரை வழிபடுவதி னால் ஏற்படும் பலன்களும் நன் மைகளும் பட்டியலுக்கு அடங் காதவை. ஏனைய வைணவத தலங்களில் சடாரி சாத்து தல் என்ற வழக்கம் இருப் பினும் இங்கு அது கிடை யாது. பதிலாக வேலாயுதம் போல் அமைந்த வெள்ளியினா லான "இராம பாணம்" என் னும் ஆயுதம் உள்ளது. இதன் அகன்ற முகப்பு நாமம் போன்ற வடிவமானது. இதனை (சடா ரிக்கு பதிலாக) பக்தர்களின் சிர சில் தொட்டு எடுக்கிறுர்கள். இதனால் பேய், பிசாசு, பில்லி, சூன்யம் ஆகியவை விலகி விடுவதாகக் கூறப்படுகிறது.

காரமடை கோயிலின் முன் புறம் ராஜகோபுரம் ஏதும் அமைக்கப்படவில்லை. கர்ப்ப கிரகத்திற்கு மேல் ஓர் கோபு ரம் சிற்ப வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ளது.

கோயிலுக்கு தெற்கு அரங் கநாயகித் தாயாருக்கு தனிக் கோயிலும் வடக்கே ஆண் டாள்நாச்சியார் கோயிலும் உள் ளது. தூண்கள் சிற்ப வேலைப் பாடுகளுடன் இருந்த போதி லும் அதில் நுணுக்கமான சிற்ப வடிவங்கள் காணப்படவில்லை. அரங்கநாயகித் தாயார் சன் னதி மண்டபமுன் கல்தூண் ஒன்றில் பத்து தலை ராவண னின் சிற்பம் செதுக்கப்பட்டுள் ளது.

கோயில் இடதுபுறம் அனு மான் சிலை உள்ளது. கருட கம்பம் கோயில் முன்னால் சிறி தாக அமைக்கப்பட்டு கருடாழ் வார் பீடமாக அமைந்துள்ளது. அரங்கநாதர் இங்கு காரைச் செடியில் தோன்றியதால் ஸ்தல விருச்சம் காரைச்செடியாக இன் றும் உள்ளது.

"சீர்பெறு மரங்கநாதத் திருவிழா
வைபவத்தைப்
பார்தனின் அடியார்க் கெல்லாம்
பகர் சமாசாரமான
ஏர் பெறுதிரு முகத்துக் கோரிடையூறு
வராது காக்க
ஊர்த்தருக்குருகெமார னொன்
கதன் பதங்கள் வாழி"



## யுகங்களில் உயிரின் பற்று

உயிரானது கிருதயுகத்தில் எலும்புகளைப் பற்றி இருந்தது. அது திரேதாயுகத்தில் மாமிசத்தைப் பற்றியும், துவாபரயுகத்தில் இரத்தத்தைப் பற்றியும், கலியுகத்தில் அன்னத்தைப் பற்றியும் இருக்கிறது.

"க்ருதேத்வஸ்தி கதா: ப்ராண: த்ரேதாயாம்
மாம்ஸ மாஸ்ரிதா:
த்வாபரே ருதிரெ சைவகலௌத்வின் னாதிஷ்"ஸ்திதா"
-ஸ்மிருதி முக்தாபலம்

இரா. தெய்வ வீர லெக்ஷ்மி - தூத்துக்குடி.

# கைகேயியின் களிப்பு

சக்தி கா.நா. தேவராசன் - காஞ்சிபுரம்.

இராவண வதம் முடிந்து இலங்கை மன்னன் விபீஷணன், இராமனுடைய பட்டாபிஷேகத்தைக் காணவும், கைகேயி அன்னையை நேரில் சந்திக்கவும் அயோத்திக்கு வருகிறான்.

நாடெங்கும் உள்ள மக்கள் உற்சாகத்துடன் மகிழ்ச்சி பொங்க அனைவரும் கண்டுகளிக்க இனிதாக முடிசூட்டுவிழா நடந்து முடிந்தது.

இலங்கை மன்னன் விபீஷணன், அனுமன், சுக்ரீவன், அங்கதன் அனைவரும் அன்னை கைகேயியின் இல்லத்திற்கு, அன்போடு வளர்த்த இராமனின் அன்னை கைகேயியைப் பார்ப்பதற்காகச் சென்றார்கள்.

இவர்களைப் பார்த்தவுடன் கைகேயி மகிழ்ச்சியோடு அனைவரையும் அன்புடன் வரவேற்று சிறப்புடன் உபசரித்தாள்.

அதன்பிறகு விபீஷணன் அன்னை கைகேயியைப் பார்த்து வணங்கி அம்மா தங்களுக்கு ஒரு மகிழ்ச்சியான நல்ல செய்தியை சொல்லுகின்றேன் கேளுங்கள்.

என் தமையன் இராவணன் வதம் ஆனவுடன் அவரால் அடைபட்டுக் கிடந்த தேவர்கள் அனைவரும் விடுதலை அடைந்த மகிழ்ச்சியில் இராமனைப் போற்றி வாழ்த்தினர்.

அதுசமயம் தேவலோகத்திலிருந்த தயரதச் சக்கரவர்த்தி அங்கு தோன்றி உங்களின் அன்பு மகன் இராமனைப் பார்த்து மகிழ்ச்சியுடன் வாழ்த்தி இராமா உனக்கு என்ன வரம் வேண்டும் கேள் தருகிறேன் என்று சொன்னார்.

அதற்கு இராமன் தந்தையை மகிழ்ச்சியுடன் வணங்கி தந்தையே தாங்கள் வெறுத்த என் அன்னை கேகேயியையும் தம்பி பரதனையும் எனக்குத் தாயாகவும் தம்பியாகவும் வரம் தரவேண்டுமென்று பணிவுடன் கேட்டார்.

### தயரதன் வரம் கேள் எனலும் இராமன் கேட்ட வரமும்

(1) என்று பின்னரும் இராமனை,
'யான் உனக்கு ஈவது
ஒன்று கூறுதி, உயர் குணத்தோய்!'
என உனையான்
சென்று வானிடைக் கண்டு, இடர்
தீர்வென் என்று இருந்தேன்
இன்று காணப்பெற்றேன்; இனிப்
பெறுவது ஏன்? என்றான்.

(2) 'ஆயினும், உனக்கு அமைந்தது
ஒன்று உரை' என அழகன்
தீயள் என்று நீ துறந்த என்
தெய்வமும் மகனும்
தாயும், தம்பியும் ஆம் வரம் தருக!
எனத் தாழ்ந்தான்;
வாய் திறந்து எழுந்து ஆர்த்தன,
உயிர் எலாம் வழுத்தி.

என்று வீபீஷணன் சொன்னவுடன் கைகேயி சந்தோஷம் தாங்காமல் சொல்வது அறியாது திகைத்து நின்றாள். தன்னிலைக்கு வந்தவுடன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக அவரைப் பார்த்து அப்



திருமலை பிரம்மோத்ஸவத்தின் ஒருபகுதியான ஸ்நபன திருமஞ்சனம்

படியா என் அன்புமகன் இராமன் என்று துள்ளிக் குதித்தாள் இவர்கள் இருப்பதையும் மறந்து.

இச்செய்தியை உங்கள் மகன் பரதனுக்கும் அனுமன் தெரிவித்தான். பரதனும் மகிழ்ந்து அனுமனை வணங்கி மகிழ்ந்து பரிசும் கொடுத்தார் என்று வீபீஷணன் கைகேயிக்குத் தெரிவித்தான்.

என்னம்மா இராமருக்கு திருமணம் ஆனவுடன் முதன் முதலாக திருமணக்கோலத்துடன் சீதையுடன் வந்து உங்கள் கால்களில் தான் விழுந்து வணங்கி ஆசி பெற்றாராமே. அதுமட்டுமல்ல.

தாங்கள் இராமா உனது தந்தையார் உன்னை 14 ஆண்டுகள் கானகம் செல்ல வேண்டும் என்று கட்டளையிட்டார் என்று நீங்கள் சொன்னவுடன் அதற்கு அவர் அம்மா தாங்களே சொனாலும் போவேனம்மா என்று உங்களிடம் சொன்னாராமே.

அதுமட்டுமல்ல பரதன் அனைவரையும் அழைத்துக் கொண்டு வனவாசம் முடிந்து வந்தபோது உங்களைப் பார்த்துத்தான் முதலில் தங்களை வணங்கினாராமே.

இச்செய்திகள் எல்லாம் நாங்கள் தெரிந்து கொண்டதன் மூலம் தங்கள் அன்பு மகன் இராமன் தங்களிடம் அளவிலா அன்பு கொண்டிருப்பதை நாங்கள் அறிந்து கொண்டோமம்மா என்றான் விபீஷணன்.

மனம் மகிழ்ச்சியில் திளைக்க கைகேயி அனைவருக்கும் விருந்து வைத்து சகல உதவிகளையும் செய்து விடை கொடுத்து அனுப்பி வைத்தாள். அவர்களும் அன்புடன் கைகேயி அன்னையிடம் விடை பெற்றுச் சென்றார்கள்.

நம் வாழ்க்கையில் எப்படி நாம் அனைவரும் நடந்து கொள்ள வேண்டும் என்று சரித்திர நாயகனான இராமன் வாழ்ந்து காட்டினான் என்பதை உணர்ந்து நாமும் அதை கடைபிடிக்க வேண்டும்.

தன்னை அன்புடனும், பாசத்துடனும் வளர்த்த சிற்றன்னையின் செயலை இராமன் ஒருபோதும் தவறாக எண்ணியதில்லை. தன் துன்பங்களுக்கு அத்தாய் தான் காரணம் என உள்ளத்தாலும் நினைக்கவுமில்லை என்பதும் காப்பியம் கற்போர்க்குப் புலனாகும்.

நம் வாழ்க்கையில் நாம் ஒருவருக்கொருவர் சமயமறிந்து உதவிய நன்றியை மறக்காமல் தம்மால் முடிந்தவரையில் பிறருக்கு உதவி செய்ய வேண்டும் என்பதே சரித்திர நாயகன் இராமன் வாழ்ந்து காட்டிய வழி. அதை அனைவரும் தெரிந்து பின்பற்றி உயர வேண்டும். ★

## திருமலைக்கு நடந்துவரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்றாக பலர் திருமலைக்கு நடந்து வருகின்றனர். தி.தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.

* யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல்லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.
* காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மசுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.
* நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.
* மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.
* திருமலைக்குச் செல்லும் வழியில் யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோந்து ஏற்பாடுகள் உண்டு.

# "சீற்றத்தோடு அருள் பெற்றவன்"

திரு. K.A. பார்த்தசாரதி - சென்னை.

பகவானுடைய குணங்கள் பலவற்றில் முக்கியமாக கொள்ளப்படுவது தன்னுடைய பக்தர்களிடம் அவன் காட்டும் அன்பு. தாய்ப்பசு தனது கன்றுக்குட்டிக்கு காட்டும் அன்பு வாத்ஸல்யம் என்ற சொல் குறிப்பிடும். தனது பக்தனுக்கு ஒரு கெடுதல் ஏற்படும் போது அந்த கெடுதலை தீர்த்து வைப்பதற்கு பகவான் முன்வருவான் என்பது கொண்டு இந்த வாத்ஸல்ய குணத்தை தெரிந்து கொள்ளலாம். அந்த சூழ் நிலையில் பகவானுக்கு, ஒரு சீற்றம் (க்ரோதம்) ஏற்படுகிறது. அந்த சீற்றத்தை வெளிப்படுத்தும்போது பக்தனுக்கு கெடுதல் செய்பவன் தண்டிக்கப்படுகிறன். அதனால் கெடுதல் நீங்குகிறது. அதுவே காரணமாக பக்தனுக்கு பகவானுடைய அருள் தன்னடையே உண்டாகிறது. நாம், நம் நிலையில் இருந்து பார்க்கும் போது 'கோபம்' என்பது தோஷமாகக் கொள்ளப்படுகிறது. அதனாலேயே கோபத்தை அடக்க வேண்டும் என்று நீதி நூல்கள் தெரிவிக்கின்றன. அதே சமயம் பகவானுக்கு ஏற்படக் கூடிய கோபம் குணமாக கொள்ளப்படுகிறது என்பதை ஆழ்வார்கள் தங்கள் அருளிச்செயல்களில் பலவிதமாக எடுத்துக் காட்டுகின்றனர்.

பகவான் தனது ஆஸ்ரிதர்களிடம் (பக்தர்கள்) நன்மை செய்ய வேண்டும் என்று மனதில் கொண்டு தான் வெளிப்படுத்திய கோபத்தை தெரிவிக்கும் சிலபாசுரங்களை மேலே அனுபவிக்கலாம்.

"ரஸோவைஸ", "ஸர்வரஸ" என்று திருமால் பால், நெய், தேன் முதலான ரஸங்களை போன்ற இனிமையானவன் என்று அனுபவிக்கப்



படுகின்றர். அந்த திருமால் பிரளய காலத்தில் பூமியாகிற மணல் பரப்பை விழுங்கி தன்வயிற்றில் ரக்ஷித்து பிறகு வெளியிட்டதாக புராணம் தெரிவிக்கிறது. அதே பகவான் தனது கிருஷ்ணவதார காலத்தில் வெண்ணையை உண்டான் என்றும் தெரிகிறது. வெண்ணெயை உண்டது ஏன் என்ற கேள்விக்கு, ஆஸ்ரிதர்களிடம் தோன்றும் அன்பை வெளியிடுவதற்காக யசோதை கைபட்டு அளைந்த வெண்ணையை விழுங்கினானே ஒழிய தன் வயிறு நிறைய வேண்டும் என்பதற்காக விழுங்கவில்லை என்பது பகவானுடைய குணத்தின் எடுத்துக்காட்டு.

இவ்வாறு பகவானுடைய பரிவு என்ற குணத்தை தன் அடியாரிடம் ஏற்படும் என்பதை எடுத்துக்காட்டி மேலே தனது பக்தனுக்கு என்று அமைந்த விரோதிகளை தொலைப்பதற்கு ஏற்பட்ட "சீற்றம்" என்ற குணத்தை வெளிப்படுத்துவதற்காக அமைந்த பாசுரம்.

"வயிறழல வாளுருவி
வந்தானை யஞ்ச
எயிறிலக வாய்மடித்ததென்நீ
பொறியுகிரால்
பூவடியை ஈடழித்த
பென்னாழிக்கையா நின்
சேவடிமேல் ஈடழியச்செற்று"
(முதல் திருவந்தாதி 93)

தன்னை எதிர்த்து வந்த இரணியனை வதம் செய்வதற்காக தோன்றிய நரஸிம்மாவதாரத்தை தெரிவிக்கும் பாசுரம் உருவிய வாளை கையில் ஏந்தி அடியார்களின் வயிறு எரியும்படியாக வந்தான் இரணியன். அந்த இரணியனும் கண்டு அஞ்சும்படியான தோற்றத்துடன் ஸ்ரீநருஸிம்மன் தோன்றினான். இரணியனை தனது மடியில் கிடத்தி தனது கையில் உண்டான நகங்களை கொண்டு அவன் கட்டுக் குலையும்படி அழித்து ஒழித்தான் என்று அவதாரத்தை தெரிவித்து மேலே "பென்னா

ழிக்கையா'' - என்று விளித்து நீ வாயை மடித்துக் கொண்டிருந்தது எதற்காக என்று கேள்வி கேட்பதாக அமைந்திருக்கிறது பாசுரம்.

ஸ்ரீ நருஸிம்மாவதாரத்தை குறிப்பிடும்போது "உக்ரம் வீரம்" என்று தெரிவிக்கப்படுகிறது. அந்த உருவத்தை கண்டாலே ஒரு பயம் தோன்றக் கூடும். ஆனால் ஆழ்வார் "பூவடியை ஈடழித்த பொன் ஆழிக்கையா" என்று மென்மை, அழகு முதலான புஷ்பங்களுக்கு உண்டான ம்ருதுத்தன்மையை தெரிவிப்பதன் காரணம் இரணியனுடைய கொடூரத்தை காட்டுவதற்காக என்று கொள்ளலாம். அதேசமயம் இரணியனுடைய நிரஸனத்தின்போது பகவானுடைய சீற்றம் வெளிப்படுகிறது. இந்த சீற்றத்துக்கு காரணமாக அமைந்தது தனது அடியானான ப்ரஹ்லாதனிடம் கொடுமை செய்த இரணியன் பக்கல் பகவானுக்கு ஏற்பட்ட சீற்றமே. அதுவே தன் அடியாரிடம் அருளாகவும் முடிவு பெறுகிறது. இந்த பாசுர வியாக்யானத்தில் பெரியவாச்சான் பிள்ளை பகவானுடைய சீற்றம் வெளிப்படும் வேறு சில சந்தர்ப்பங்களையும் உதாரணம் காட்டுகிறார்.

ஸ்ரீமத் ராமாயணம் 'ஆரண்ய காண்டத்தில்' ஸ்ரீராமபிரானுக்கு ஏற்பட்ட சீற்றம் - "கோப மாஹார்யத்தீவ்ரம் வதார்த்தம் ஸர்வ ராக்ஷஸம்" (24-34) எல்லா அரக்கர்களையும் கொல்ல கடும் கோபத்தை ஸ்ரீராமன் வரவழைத்துக்கொண்டான் என்பது. விரோதிகள் அழிந்தால் கோபம் தானே அடங்கிவிடும் என்பது.

ஸ்ரீராம ராவண யுத்தம் நடைபெறும் சமயம். ராவணனின் அம்பு பட்டு அனுமனுக்கு உடலில் காயம் ஏற்படுகிறது. அதனால் ஸ்ரீராம பிரானுக்கு கோபம் ஏற்படுகிறது. அங்கே அமைந்திருக்கும் ஒரு ஸ்லோகம்.

ததா ராமோ மஹா தேஜோ
ராவணேன க்ருத வ்ருணம்
த்ருஷ்ட்வா ப்லவக சார்த்தூலம்
கோபஸ்ய வசமே யிவான்.

ஸ்ரீராமபிரானுக்கு ஏற்பட்ட கோபமே காரணமாக ராவணன் அழிந்தான். அதற்கு முக்கிய காரணமாக அமைந்தது ஸ்ரீராம பிரான் கொண்ட சீற்றம் என பது மேலே தெரிவிக்கப்பட்ட ஸ்லோகம்.

ஆழ்வார் பாசுரத்தில் முத்லில் இரணியனுடைய கொடுமை தெரிவிக்கப்பட்டது. ப்ரஹ்லாதனுக்கு செய்த கொடுமையை கேட்டு "வயிறழல" (எம்பெருமானுக்கு என்ன கேடு வருகிறதோ என்று சொல்லும்படி) உருவிய வாளுடன் தோற்றம் அளிக்கிறான் இரணியன். அந்த தோற்றமே காரணமாக பகவானுக்கு கோபம் ஏற்பட்டு தூணிடையே சிங்கமாக தோன்றுகிறான். இரணியனை, தன்மடியில் கிடத்தி தனது நகத்தினால் அவன் மார்பை கிழித்து வதம் பூர்த்தியாகிறது. பயத்தை தோற்றுவித்தது இரணியனுக்கே ஒழிய ஆஸ்ரிதனான ப்ரஹ்லாதனுக்கு அவன் நன்மையே மனதில் கொண்டு செயல்பட்டான் என்பது சரித்திரமாகையாலே "சீற்றத்தோடு அருள் பெற்றவன்" பக்தனான ப்ரஹ்லாதனே என்பது விளங்கும்.

பகவானுக்கு ஏற்படக்கூடிய சீற்றத்தை ஆழ்வார்கள் அனுபவித்திருக்கும் மற்றுமோர் சந்தர்ப்பத்தை கீழ்க்கண்ட பாசுரம் மூலமாக நாம் காணலாம்.

திருமழிசை ஆழ்வார் தமது நான்முகன் திருவந்தாதி என்ற பிரபந்தத்தில் ஸ்ரீநருஸிம்மாவதாரத்தில் சீற்றத்தையும் அதனால் வெளிப்படும் அழகையும் காட்டுகிறார்.

இவையா! பிலவாய்
திறந்தெரிகான்ற
இவையா! எரிவட்டக் கண்கள்-
இவையா!
எரிபொங்கிக்காட்டும் இளமையோர்
பெருமான்
அரிபொங்கிக்காட்டும் அழகு.

நரஸிம்மாவதாரத்தின் கோபத்தின் எடுத்துக்காட்டாக அவனுடைய வாய் ஜ்வாலையுடன் எரிகின்ற குகையினுடைய வாய்போன்று இருக்கிறது கண்கள் எரிவட்டம்போல் உருண்டு சிவந்து ஜ்வலிக்கின்றன. எரிகின்ற நெருப்பு போல் பிரகாசிக்கின்ற திருமேனியை உடையவன் என்றும் சொல்லி வடிவை காட்டினார். நித்ய ஸூரிகளின் தலைவனான ஸர்வேஸ்வரன் என்று ஆச்சர்யப்படுகிறார் ஆழ்வார். "அவிகாரய" என்று போற்றப்படும் பகவான் அவனுடைய அடியார்களுக்கு கெடுதல் செய்பவர்கள் விஷயத்தில் சீற்றம் கொண்டால் அதனால் ஏற்படும் விகாரம் (பயங்கரமான தோற்றம்) எடுத்துக்காட்டப்படுகிறது இந்த அவதாரத்தால்.

இதே அவதாரத்தை திருச்சந்த விருத்தம் என்ற மற்றுமோர் பிரபந்தத்தில் திருமழிசை ஆழ்வார் அமைத்திருக்கும் பாசுரமும் கீழே தெரிவிக்கப்படுகிறது.

கரண்டமாடு பொய்கையுள்
கரும்பனைப் பெரும்பழம்
புரண்டுவீழ வாளைபாய்
குறுங்குடி நெடுந்தகாய்

திரண்டதோள் இரணியன்
சினங்கொள் ஆகம்ஒன்றையும்
இரண்டுகூறு செய்துகந்த
சிங்கம் என்பது உன்னையே.

குறுங்குடி நெடுந்தகாய்! என்று திருக்குறுங்குடி எம்பெருமானை முன்நிறுத்தி முரட்டு இரணியனை அழியச்செய்த சிங்கம் நீதானே! என்று ஆச்சர்யப்படுகிறார். அந்த எம்பெருமானே சௌந்தர்ய பரிபூரணன். நரஸிம்மனோ சீற்றத்தால் பயங்கரமான உருவம் கொண்டவன்.

திருமங்கை ஆழ்வார் பெரிய திருமொழியில் சிங்கவேள் குன்றம் (அஹோபிலம்) என்ற திவ்விய தேசத்தை மங்களாசாசனம் செய்யும் பதிகத்தில் பத்து பாட்டுகளில் ஸ்ரீநருஸிம்மாவதாரத்தில் ஏற்படும் சீற்றத்தை பல படியாக விவரித்திருக்கிறார். அந்த பதிகம் அதற்கமைந்த வியாக்யானத்துடன் அநுபவிக்கத்தக்கது.

இதுவரை ப்ரஹ்லாதன் விஷயமாக இரணியன் விஷயமாக ஏற்பட்ட சீற்றத்தை நரஸிம்மாவதார பரமாக ஆழ்வார்கள் பாசுரங்களை கொண்டு அநுபவித்தோம். மற்றுமோர் சந்தர்ப்பத்தில் பகவானுக்கு ஏற்பட்ட சீற்றத்தை ஆழ்வார் பாசுரம் கொண்டு அனுபவிக்கலாம்.

கடிகொள் பூம்பொழில்
காமருபொய்கை
வைகுதாமரை வாங்கிய வேழம்
முடியும் வண்ணமோர்
முழுவலி முதலை
பற்ற மற்றது நின்சரண் நினைப்ப
கொடியவாய் விலங்கின்னுயிர்
மலங்கக்
கொண்டசீற்றமொன் றுண்டுளை-
தறிந்து-உன்
அடியனேனும் வந்தடியிணை
யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்-
தம்மானே!
(பெரிய திருமொழி 5.8.3)

ஒரு தாமரை தடாகத்தில் நறுமணம் கமழும் தாமரை பூக்கள் பூத்து குலுங்குகிறது. கஜேந்திரன் என்கிற யானை அந்த மலர்களை பரித்து எம்பெருமான் திருவடிகளில் அர்ச்சனை செய்ய வேண்டும் என்ற ஆசையினால் அந்த பூக்களை பறிக்க குளத்தில் இறங்குகிறது. அந்த யானைக்கு கெடுதல் விளைவிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஒரு முதலை அந்த யானையின் கால்களை கடித்து இழுத்து உயிருக்கு ஊறு விளைவிக்க முற்படுகிறது. முதலைக்கு நீரில் பலம் அதிகமான படியாலே யானை தன் முயற்சியை தவிர்த்து பகவானே ரக்ஷகன் என்ற எண்ணம் தோன்ற அவன் திருவடிகளையே சரணமாகப் பற்றி ஆதிமூலமே என்று கூவி அழைக்கிறது. அப்பொழுது சீற்றம் கொண்ட பகவான் பொய்கை கரைக்கு விரைந்து வந்து தன்கையில் ஏந்திய சக்ராயுதத்தை பிரயோகித்து கொடிய விலங்கான முதலையின் உயிரை வாங்கி அடியாரான கஜேந்திரனை ரக்ஷித்தான் என்று இந்த பாசுரம் மூலம் நமக்கு எடுத்துக்காட்டுகிறார் திருமங்கையாழ்வார்.

கஜேந்திரன், பிரஹ்லாதன் போன்ற பக்தர்களுக்கு அருள் செய்வதே நோக்கமாக பகவானுக்கு ஏற்பட்ட சீற்றம் பக்தர்களுடைய நன்மையை மனதில் கொண்டே ஏற்படுகின்றது என்ற அடிப்படையை ஆழ்வார்கள் பாசுரங்களை கொண்டு சிறிது அனுபவிக்கப் பிராப்தமாயிற்று.

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த "பகவத் குணதர்ப்பணம்" என்ற பாஷ்யத்தில் "அம்ருத்யு" என்று தொடங்கி "ஸ்வராஸிவத" என்ற தளவான பதினொன்று திருநாமங்களில் ஸ்ரீநருஸிம்மாவதாரம் குறிப்பிடப்படுவதாக தெரிவிக்கிறார்.

திருவரங்கம் திருப்பதியில் இரணியனை மடியில் கிடத்தி மார்பை தன்விரல் நகங்களால் கிழிப்பது போலவும் அதேசமயம் மற்றொரு கையை உயர்த்தி ப்ரஹ்லாதனுக்கு அருள் செய்வது போலவும் ஸ்ரீநருஸிம்மனுக்கு ஒரு கோயில் அமைந்திருக்கிறது. இவருக்கு மேட்டு அழகிய சிங்கர் என்று பெயர். ஸ்ரீபராசர பட்டர் இந்த நரஸிம்மன் விஷயமாக இட்டருளிய ஒரு ஸ்லோகத்தை தெரிவித்து பூர்த்தி செய்கிறேன்.

வ்யாபி ரூபமபி கோஷ்பதயித்வா
பக்தவத்ஸல தயோத்ஜித வேலம்
தத் த்விஷந்தபந்ருகேசரி ரூபம்
கோபுரோபரிவிஜ்ருதம் பிதமிடே.



## யாத்திரிகர்களுக்கு ஓர் அறிவிப்பு

புனித ஸ்தலமான திருமலைக்கு சிறப்பு நாட்களிலும், திருவிழா நாட்களிலும் யாத்திரிகர்கள் அதிக அளவில் வருகை தருவதால் 'முதலில் வந்தவர்களுக்கு முதலில்' எனும் முறைப்படி தங்கு வசதிகள் அளிக்கப்படும். அதாவது ஆனிவார ஆஸ்தானம், பவித்ரோத்ஸவம், ப்ரம்மோத்ஸவம், புஷ்பயாகம், வருடப்பிறப்பு முதலான நாட்களில் முன்பதிவு ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

செயலாட்சித்தலைவர்.

(தொடர் கட்டுரை)

# திருமலை வரலாறு

ஆங்கில மூலம்
திரு. சாது சுப்பிரமணிய சாஸ்திரி

தமிழாக்கம் :
திரு. அ. நடராஜன்

## அத்தியாயம் 3

## வேங்கடமலைமீது வராகசுவாமியின் வாசமும் அம்மலையின் மகிமையும்

ஸ்ரீ சுவேத வராக சுவாமி பூமியை மீட்டதிலிருந்து, அதேசமயம் கருடன் வேங்கடமலையை (விளையாட்டு மலையை) வைகுண்டத்திலிருந்து எடுத்து வந்ததிலிருந்து வராக சுவாமி கண்ணிற்குப் புலப்படாது இம்மலைமீது இருந்து கொண்டும், ஆற்றுப் படுகைகளிலும் அருவிகளுடன்கூடிய மலைமுகடுகளிலும், இம்மலையின் பள்ளத்தாக்குகளிலும் இலட்சுமியுடன் விளையாடி இன்புற்றும் வருகின்றார்; சில சமயம் தெய்விகத் தன்மையுள்ள மனிதர்களுக்குக் காட்சியளிக்கின்றார். சுவேதவராக கல்பத்தின் இறுதி வரையில் அவர் இம்மலைமீது இருந்து வருவார் எனப் பிரமன் உறுதியளித்துள்ளார். ஒவ்வொரு கல்பத்திலும் அவர் பூமியை மீட்டும், முன் இருந்ததுபோல் அதை அமர்த்தியும், உயிர்ப்பித்தும் வருவதால், அவரது காலம் சுவேத வராக கல்பம் என முனிவர்களால் அழைக்கப்படுகின்றது.

[நாம் செய்யும் சமயச் சடங்குகளின்போது முதலில் நாம் செய்து கொள்ளும் சங்கல்பத்தில், அதாவது உறுதிமொழி எடுத்துக்கொள்ளுகையில், நாம் இன்றைய காலத்தை சுவேத வராக கல்பம் என்றும், இம்மலையினையும், அதைச் சுற்றியிருக்கும் பகுதியினையும் ஸ்ரீவராக க்ஷேத்திரம் என்றும் குறிப்பிடுகின்றோம்.]

சாதுக்களுக்குத் தீங்கு ஏற்படும்போது, அறம் நலிவடையும் போது, அதருமம் நிலை கொள்ளும்போது, தீயோர் வலுவடைந்து மக்களைத் துன்புறுத்தும்போது, அவர் நரதே வராக (மானிடக்கடவுளாக்) அந்தச் சமயங்களுக்கேற்ப வெளிப்பட்டு, தீயதை அழித்து, நல்லறத்தை உறுதியாக நிலைநிறுத்தி, நல்லோரைப் பாதுகாத்து, வேதங்கள் பற்றிய படிப்பிற்கும் அறிவிற்கும் ஊக்கமூட்டி, தமது உறைவிடத்தி





பெரிதும் உயர்ந்தது; அதன் சக்திகளும் மிகவும் வலுப்பெற்று விளங்கின. எனவே, மந்திர சித்தி, யோக சித்தி, காம்ய சித்தி (விரும்பியதைப் பெறும் சக்தி) மற்றும் பல சித்திகள் போன்ற பல்வேறு ஆன்மிக சாதனைகளுக்கான மானிட முயற்சிகள் இதில் வெற்றி பெறுவது உறுதி. தடைகள் எவையும் இருக்காது. இம்மலை மீது செய்யப்படும் சிறிய நற்கருமங்கள் கூட விரும்பியன வற்றைச் சாதிப்பதற்கு உதவி புரிவனவாக அமையும். எல்லாப் புண்ணிய தீர்த்தங்களும் இம்மலையில் உள்ளன. நம்பிக்கையுடனும் பக்தியுடனும் தொடர்ந்து வழிபடுவோருக்கு அவர்கள் கோருவன அனைத்தும் அறிவு வேண்டுவோருக்கு அறிவு, செல்வம் வேண்டுவோருக்கு ஏராளமான பொன், குழந்தைகள் வேண்டுவோருக்குக் குழந்தைகள், அரசு வேண்டுவோருக்கு அரசு, உடலில் குறைபாடு உள்ளவர்களுக்கு நிறைவான மற்றும் அழகிய தோற்றம் - கால் நடைச் செல்வம், தானியங்கள் எல்லாமே கிடைக்கும்.

விருந்து அனைத்துப் பிராணிகளுக்கும் காட்சியளிக்கின்றார். இலட்சுமியுடனும் தேவர்கள் மற்றும் அவருக்குச் சேவை புரிபவர்கள் ஆகியோருடனும் சேஷாசல மலையின் மீது உலவுகின்றார்; ஏன் எனில், சுவர்க்கத்தைவிடவும், சூரிய உலகைவிடவும், தமது வைகுண்டத்தையுமே விடவும் அதிகமாக அவர் இம்மலையினில் மகிழ்ச்சி அடைகின்றார்.

"ஆஸ்த்தாய ச்வேத போத்ரித்வம்
உஜ்ஜஹார தராம் யதா. (சு.4)

ததை வானாய்ய வைகுண்டாத்
அசலம் கருடேன வை,
கல்பாதாவேவ பகவான்
லீலாரஸ மஹோததிஹி. (சு.5)

விஹரன் ரமயா ஸார்தம்
தரீ நிர்ஜஹார ஸாநு ஷு,
ப்ரகாசச்சாப் ரகாசச்ச
திஷ்ட்டத்யேவ ஸதா கிரௌ.(சு.6)

யாவத் கல்ப்பம் வஸத்யேவ
ப்ரோக்தம் ச பரமேஷ்ட்டினா,
கதாசித் புண்ய சீலேப்யோ
தர்சனம் விதரத் யஸௌ. (சு.7)

கல்ப்பேகல்ப்பே ச தரணீம்
உத்தரத்யேவம் ஏவ ஹி,
ச்வேதவராஹ ரூபேண
தரணீ சோத்த்ருதா யதஹ (சு.8)

ச்வேதவாராஹகல்ப்பஸ்யாத்
ஆக்யயா முனயோஹ்யயம் (சு.9)

ஸர்வதா சேஷ சைலேந்த்ரே
விஹரன் ரமயா ஸஹ
நித்யைர் முக்தைச்ச தேவைச்ச
காமரூபைச்ச ஸம்யுதஹ (சு.13)

திஷ்ட்டத்யேவ ஸதா தஸ்மின்
வேங்கடாக்யே நகோத்தமே,
வைகுண்டஸ்வர்க ஸௌர்யேப் யஹ
ஸ்வகேஹேப்யோ
(அ)திகப்ரியஹ (சு.14)

அயம் பகவதோஹ்ருத்யஹ
பர்வதஹ் புண்ய
கானனஹ (சு.15)

(வராக புராணம், பகுதி1, அத்தி. 4, சுலோகங்கள் 4-15)

இம்மலை முதலில் சுவர்க்கத்தில் மகாவிஷ்ணுவின் மலையாயிருந்ததனாலும், வராக சுவாமி தமது உறைவிடமாக அதைத் தேர்ந்தெடுத்துக் கொண்டதனாலும் அதன் புகழ்

மன்த்ரஸித்திஸ் தபஸ்ஸித்திர்
யக்ஞ ஸித்திஸ் ததைவ ஹி(சு.15)

காம்யஸ்ய கர்மணஹ் ஸித்திர்
ஏவம் அன்யச்ச ஸித்தயஹ,
பவன்த்யத்ர நராணும் ச
ந ஹி விக்நாதிகம் க்வசித் (சு.16)

அல்ப்பேன தபஸா அபீஷ்ட்டம்
ஸித்தயத்யஸ்மின்
கிரௌ வரே,
ஸர்வதீர்த்தானி ஸததம்
புண்யான் யத்ரைவ
ஸன்தி ஹி (சு.17)

ய ஏவம் ஸேவதே நித்யம்
ச்ரத்தா பக்தி ஸமன்விதஹ,

க்ஞானார்த்தி க்ஞானமாப் நோதி
த்ரவ்யார்த்தி கனகம் பஹு (சு.18)

புத்ரார்த்தி புத்ரமாப்நோதி
ந்ருபோ ராஜ்யம் ச விந்ததி,
வ்யங்கச்ச ஸாங்க ஸத்ரூபம்
பசூன் தான்யானி விந்ததி (சு.19)

யம் யம் காம்யதே மர்த்த்யஹ
தம் தம் ஆப்நோதி ஸர்வதா(சு.20)

(வராக புராணம், பகுதி 1,
அத்தி. 4, சுலோகங்கள் 15-20)

இப்பொன்மலையில் எட்டு வகைக் கனிச்சுரங்கங்கள் உள்ளன; அவை வெவ்வேறு யுகங்களில் புனிதர்களின் பார்வைக்குப் புலப்படும். இம்மலையின் மீது வதியும் ஸ்ரீநிவாஸப் பெருமானைப் போலவே இந்த ஸ்ரீநிவாஸ மலையும் ஒரு சமயம் பொன்மலையாகவும், மற்றொரு சமயம் ஞானம் மற்றும் அறிவு ஆகியவற்றின் உருவாகவும், அணிகலன்கள் பூண்ட ஸ்ரீநிவாஸரைப் போன்றே இரத்தினக் குவியலாகவும், காலம் மாறும் போது பிறிதொரு சமயம் பாறைமலையாகவும் தோற்றமளிக்கின்றது.

இவ்வாறாக இப்புண்ணிய மலையின் சிறப்பியல்பினை எவராலும் கண்டுகொள்ள இயலாது. வேங்கடமலை உண்மையிலேயே பொன்மலையாக இருப்பினும், கலியுகத்தில் அது மானிடர்க்கு ஒரு சாதாரணப் பாறைமலையாகவே தோன்றும்.

அஷ்ட்டானாம் கனயஹ ஸந்தி
லோஹானாம் கனகாசலே,
யுகபேதேன த்ருச்யந்தே
நாராணாம் புண்ய கர்மணாம் (சு.30)
ஸ்ரீநிவாஸ கிரிச்சாயம்
கதாசித் கனகா சலஹ,
கதாசித் க்ஞானரூபோயம்
கதாசித் ரத்னரூபகஹ (சு.34)

ஸ்ரீநிவாஸ இவாபாதி
கதாசித் பூஷணோஜ்வலஹ,
காலபேதேன கேஷான் சித்
ப்ராக்ருதாசல ரூபத்ருத் (சு.35)

அப்ராக்ருதஸ் ஸ்வர்ண ஸாநுர்
அபி ஸ்ரீவேன்கடாசலஹ,
ப்ராக்ருதாசலவத் பூமௌ
பவிஷ்யதி காலௌ யுகே.

(வராக புராணம், பகுதி 1,
அத்தி. 26, சுலோகங்கள் 30,34,35)

ஆழ்ந்த பக்தியுடன் இம்மலை மீது ஏறினால், கால்கள் வலுப்பெற்று நொண்டியும் விரைவாகச் செல்வான்; குருடனும் தெளிவான தாமரைபோன்ற அழகான கண்களைப் பெற்றுக் கண்பார்வையினை அடைவான்; காது கேளாதவனுக்குக் கேட்கும் சக்தி கிடைக்கும்; குழந்தைப் பேறு இல்லாத பெண்ணிற்கு நிறையக் குழந்தைகள் பிறக்கும்; வறுமையில் வாடும் ஏழைகளுக்குச் செல்வம் குவியும். இம்மலையின் சக்தியின்மீது பக்தி இருந்தால்தான் இவை அனைத்தும் சாத்தியமாகும். உண்மையில், வேங்கடமலையின் மெய்யான இயல்பினையும் வடிவினையும் அவரால் தான் முழுமையாகவும் திட்டவட்டமாகவும் அறிந்துகொள்ள முடியும்.

வேன்கடாத்ரௌ பராம் பக்தியும்
வஹன் கச்சதி சேத் கிரிம்,
பங்குர் ஜங்கால ஏவ ஸ்யாத்
அசக்ஷுஹ் பத்ம லோசனஹ(சு.31)

மூகோ வா சஸ்பதிர் தூர
ச்ராவீ து பதிரோ பவேத்,
வந்த்யா து பஹுபுத்ரா ச
நிர்தனஸ் ஸதனோ பவேத் (சு.32)
ஏதத் ஸர்வம் கிரௌ பக்தி
மாத்ரேணைவ பவேத் த்ருவம்,
தத்வதோ வேன்கடா த்ரேஸ்து
ஸ்வரூபம் வேத்தி கஹ
புமான் (சு.33)

(வராக புராணம், பகுதி 1,
அத்தி. 8, சுலோகங்கள் 31-33)

(தொடரும்)

## கடவுளின் கருணை?

இராம இராவணயுத்தம் முடிந்து போர்க்களத்தை சுத்தப்படுத்த வீரர்கள் ஆயத்தமாகின்றனர். ஒரு பெரிய கழுகு பரந்து வருகிறது. எதிர்பாராதவிதமாக அதன் மூன்று முட்டைகள் வெளிப்பட்டு, குருதி ஆற்றில் மெல்ல, மெல்ல நகர, அதைக்கண்ட கழுகு, கண்ணீர் மல்க பறந்து செல்கிறது. அப்போது அங்கே வந்த யானையின் மணி ஒன்று (உள்நாக்கு இல்லாத) அந்த மூன்று முட்டைகளின் மேல் விழுந்து மூடிவிடுகிறது. எல்லா இடங்களையும் சுத்தப்படுத்தியபின்னர், இந்த மணியை ஆட்கள் எடுக்க அதன் உள்ளே இருந்து மூன்று கழுகுக் குஞ்சுகள் மெல்ல வெளிப்பட எல்லாரும் வியப்படைகின்றனர். கண்ணீருடன் வானத்திலே வட்டமிட்ட தாய்க்கழுகு, ஓடிவந்து தன் மூன்று குஞ்சுகளை அரவணைக்க, அனைவரின் கண்களிலும் கண்ணீர் ததும்புகிறது. என்னே, இறைவனின் கருணை! கல்லினுள் தேரைக்கும் கருப்பை உயிர்க்கும் புல்லுணவே தருபவர் அந்த இறைவன்தானே!

நன்றி: கல்யாணராமன் அவர்கள்

திருமதி. வஸந்தா வேணுகோபால் - சென்னை.

# திருநணா

# பவானி கூடல் ஆலயம்

திரு. என். ராமகிருஷ்ணு - மயிலாடுதுறை.

பவானி என்னும் தலம் கொங்கு நாட்டில் காவிரியாறு செல்லும் வழியில் உள்ளது. இதற்கு "திருநணா" என்ற புராதன பெயரும் உண்டு. காவிரியும் பவானியும் கலக்குமிடத்தில் உள்ள இத்தலம் "பவானி கூடல்" என்ற சிறப்புப் பெயரால் சாத்திரங்களிலும் புராணங்களிலும் பேசப்படுகின்றன. மற்றும் கண்ணுக்கு தெரியாத அமுத நதியும் கலப்பதால் இத்தலத்தை "திரிவேணி சங்கமம்" என்று கூறலாம். வடநாட்டில் கங்கை, யமுனை, சரஸ்வதி என்ற நதிகள் கூடுமிடம் பிரயாகை. இங்கு இந்த நதிகள் கூடுமிடம் "கூடுதுறை" என்று அழைக்கப்படுகிறது. காவேரியும், பவானியும் எப்பொழுது கூடிற்றோ அப்போதே இத்தலம் உண்டாயிற்று. அதனால் கால வரையறை கடந்தது.



கோவிலும் புராதனமானது. பல பெருமக்கள் வாழ்ந்த இடம் இது. தேவார காலத்திலும் திருஞான சம்பந்தரால் பாடப்பட்டுள்ளது. இங்குள்ள ஆலயம் மிகவும் பழுதடைந்து வெள்ளத்தால் பாதிக்கப்பட்டு அழிவடைந்து வருவதைக் கண்ட கோவை மாவட்ட சமயப்பற்றுள்ள மக்கள் இதை திருப்பணி செய்து உன்னத நிலைக்கு கொண்டு வர ஆசைப்பட்டனர். 1956ம் ஆண்டு திருப்பணி துவக்கப்பட்டு 1967-ல் மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. இப்போது இத்தலம் பெரியார் மாவட்டத்தில் உள்ளது.

இத்தலம் சங்ககிரி, நாககிரி (திருச்செங்கோட்டு மலை) மங்கலகிரி (பெருமாள் மலை) வேதகிரி (ஊராய்ச்சி கோட்டை மலை) பத்மகிரி (காவேரி நதிக்கும், காயத்திரி நதிக்கும் இடையே உள்ள குன்று) இவைகளுக்கு நடுவில் இருப்பதால் "பஞ்சகிரி மத்திய பிரதேசம்" என்ற சிறப்பு பெயரினை உடையது.

ஆலயம் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கொங்கு நாட்டு சிற்றரசர்களால் தொடங்கி முதலி வம்சத்தவர்களால் முடிக்கப்பட்டது. பெருமாள் பெயர் ஸ்ரீசங்கமேசுவரர், அம்பிகை, ஸ்ரீவேதநாயகி மற்றும் குமரக்கடவுள், ஜுஹரேசுவர், ஆதிகேசவபெருமாள் ஆலயங்களும் உள்ளன. அம்மன் கோவில் மண்டப தூண்களில் உன்னதமான சிற்பங்கள் உள்ளன. பெருமாள் கோவில் கோவில் மண்டபத்தில் உள்ள இரங்க மண்டப உத்தரங்களில் "இராமாயணம்" சித்தரிக்கப்பட்டுள்ளது.



தலவிருட்சம்: சிவபெருமானுக்கு "திருநணு உடையார்" என்ற பெயரும் உண்டு என்று கல்வெட்டுகள் அறிவிக்கின்றன. தேவாரத்தில் திருநணு என்ற பெயரே காணப்படுகிறது. இரண்டு ஆறுகளுக்கும் நடுவே அமைந்திருப்பதால் "நண்ஆம்" நாதரானார். நட்டாற்றீசர் என்ற பெயரும் வழங்குகிறது. தன்னை அண்டியவர்களுக்கு தீமைகள் நண்ணு தலமாதலின் நணு என்ற பெயர் வந்ததென்று சிலர் கூறுவர்.

தல விருட்சம் இலந்தை, இதற்கு வடமொழியில் "பத்ரி" என்று பெயர். வடமொழியில் இத்தலத்திற்கு "பத்ரி வனம்"என்ற பெயர் வழங்கி வந்தது. அம்பிகையின் பெயர் கல்வெட்டுகளில் "பண்ணார் மொழி அம்மை" என்று காணப்படுகின்றது.

காவிரியில் காயத்திரி தீர்த்தம் உள்ளது. காயத்திரி லிங்கத்தில் கோவில் உள்ளது. "அமுதலிங்கம்" என்ற லிங்கத்தின் சந்நிதி ஒன்று உள்ளது. அமுதமே லிங்கமாக மாறிவிட்டது என்று புராணம் கூறுகின்றது. லிங்கம் ஆவுடையார் மீது தனியாக வைக்கப்பட்டுள்ளது. எடுக்கலாம், வைக்கலாம், பிள்ளை இல்லாதவர்கள் இதை இடுப்பில் எடுத்து வைத்துக் கொண்டு வலம் வந்தால்,



மகப்பேறு பெறுவார்கள் என்பது நம்பிக்கை. அமுதலிங்கத்தின் அடியில் தான் அமுதநதி ஊற்றுப் புறப்பட்டு காவிரியில் கலக்கிறது. காயத்திரி மடு மிகவும் ஆழமானது. இங்கு முதலைகள் கூட வாழலாம்.

மூன்று கால்கள், மூன்று கைகள், மூன்று தலைகள் கொண்ட "ஜ்வரஹரேசர்" சந்நிதி பிரசித்தமானது. மற்ற கோவில்களில் காண்பது அரிது கடும் சுரம் உள்ளவர்கள் இவரை பிரார்த்தித்து பயன் அடைகிறார்கள்.

ஆதிகேசவ பெருமாளும் சௌந்தரவல்லி தாயாரும் இக்கோவிலுக்குள் எழுந்தருளியுள்ளார்கள். மைசூர் மன்னர் நிறுவிய வேணுகோபாலர், நரசிம்மர் உருவங்கள் அழகாக உள்ளன. விநாயகரின் பல உருவங்கள் காண்கிறோம். மேல்தளத்தில் வீணை ஏந்திய புலப்பாத விநாயகர் மிகவும் அழகான உருவம் வெள்ளையனுக்கு நம்பிக்கை ஏற்படுத்தி உயிர் பிச்சை அளித்த அம்பிகை இங்குள்ள வேதநாயகி அமமன். இந்த வரலாறு இன்றும் கூறப்படுகிறது.

ஆங்கிலேயர் ஆண்ட காலத்தில் கோவை சேலம் மாவட்ட ஆட்சியர் பவானியில் தான் இருந்தார். வில்லியம் காரோ என்பவர் வேதநாயகியின் பெருமையைக் கேள்விப்பட்டு அவளை தரிசிக்க ஆவல் கொண்டார். ஆனால் தான் கோவிலுக்குள் செல்ல முடியாததால் மதில் சுவரில் துவாரம் செய்து தினமும் கனவு கண்டார். அம்பிகை வடிவில் ஒரு பெண் தன்னை வெளியே அழைத்து வருவது போல்

இருந்தது. உடனே எழுந்து வெளியில் வந்தார். அப்போது அவர் படுத்திருந்த இடத்தின் மேல் விட்டம் ஒடிந்து விழ, கூரை இடிந்து விழுந்துவிட்டது. அம்பிகையே தன்னை காப்பாற்றி விட்டதாக எண்ணினார். அம்பிகைக்கு காணிக்கையாக தந்தத்தால் தொட்டில் செய்வித்து அதில் தமிழிலும் ஆங்கிலத்திலும் தன் பெயரையும் 1804ம் ஆண்டு ஜனவரி 11 என்ற தேதியையும் பொறித்தார். அதை இன்றும் காணலாம்.

இத்தலத்தைப் பற்றி உள்ள வடமொழி புராணத்தை வித்துவான் வாசுதேவ முதலியார் தமிழில் 901 பாடல்களில் மொழி பெயர்த்துள்ளார். பால பாரதி முத்துச்சாமி அய்யர் "நட்டாற்றீசுவரர் சதகம்" என்ற நூலையும், கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளார். "வேதநாயகன் பிள்ளைத் தமிழ்" என்ற நூலும் உள்ளது. அருணகிரியார் பாடிய திருப்புகழ் நூலும் உள்ளது. இன்னும் பல இருக்கலாம்.

கூடுதுறையில் ஆடிப்பெருக்கின் போதும் கிரகணத்தின் போதும் கூட்டம் கூடும். திருப்பணி குழுவினர் படிகளையும், ஆற்று ஓரச் சுவர்களையும் செப்பனிட்டு கட்டியுள்ளார்கள். கம்பிகள் போடப்பட்டுள்ளன.

இக்கோவிலில் அழகான வெண்கலச் சிலைகள் உள்ளன. முக்கியமானவை நடராஜர், போகசந்தி அம்மன், கொங்கு மண்டல வடகரை நாடு என்ற பிரிவில் உள்ள 24 ஊர்களில் இதுவும் ஒன்று. "கொங்குகழ்" சிவத்தலங்களில் பவானி ஒன்று. மற்ற பாடல் பெற்ற தலங்களாவன: அவினாசி, திருமுருகன்பூண்டி, திருச்செங்கோடு, திருபாண்டிக் கொடுமுடி, கரூர், வெஞ்சாமக் கூடல், பவானி செல்ல பஸ் வசதிகள் உண்டு. பக்கத்தில் உள்ள புகைவண்டி நிலையம் ஈரோடு. ✡





வாருங்கள்! காணுங்கள்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஆலய தரிசனம்





திருப்பதி மற்றும் அதனைச்சுற்றியுள்ள முக்கிய திருக்கோயில்களை மிக எளிதில பக்தர்கள் தரிசிக்கும் வண்ணம் தி.தி. தேவஸதானம் ஆலய தரிசனததை அறிமுகப்படுத்தியுள்ளது. ஒவ்வொரு நாளும் காலை 6 மணி, 10 ணி மற்றும் மாலை 3 மணி ஆகிய நேரங்களில் திருப்பதி இரயில் நிலையத்திற்குப் பின்புறம் உளள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருந்து இதற்கென்றே சிறபபு பேருந்துகள் புறப்படுகின்றன.

### காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.
2) ஸ்ரீ கல்யாணவேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில், ஸ்ரீனிவாசமங்காபுரம.
3) ஸ்ரீ அகஸ்தீஸ்வரசுவாமி திருக்கோயில், தொண்டவாடா.
4) ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருக்கோயில, திருப்பதி.
5) ஸ்ரீ ஹரேராம ஹரேகிருஷ்ண திருககோயில், திருப்பதி.
6) ஸ்ரீ கோதண்டராமசுவாமி திருக்கோயில், திருப்பதி.
7) ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி திருக்கோயில், திருப்பதி.
8) வட்டார விஞ்ஞான மையம், திருப்பதி.

### பேருந்து கட்டணம் :

| | |
|---|---|
| பெரியோர் | : ரூ. 20/- (நபர் ஒருவர்க்கு) |
| சிறூர் | : ரூ. 10/- (நபர் ஒருவர்க்கு) |

[சிறப்பு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]

# துரியோதனன் பெற்ற சாபங்கள்

திரு. மு. மணி - வேலூர்.

முகவுரை :

இராமாயணமும், மகாபாரத நூலும் தமிழிலக்கியத்தில் உள்ள சிறப்பான இரு காவியங்களாகும். இராமாயண நூலைக் கவிச்சக்கரவர்த்தி கம்பரும், மகாபாரத நூலை வில்லிபுத்தூராழ் வாரும் இயற்றி அழியாப் புகழ் பெற்றனர். பஞ்ச பாண்டவர்கள், துருயோதனன் ஆகியோர்களது வரலாற்றைக் கூறும் இம்மகாபாரதத்தில் பாற்கடலில் பள்ளி கொள்ளும் பரந்தாமனாகிய மகாவிஷ்ணு ஸ்ரீகிருஷ்ணனாக அவதரித்து அதர்மத்தையழித்து தர்மத்தைக் காக்க பாண்டவர்கள் பக்கமிருந்து பாண்டவர்களுக்கு உதவி செய்து துரியோதனாதியர் களைப் போரிட்டு அழித்த விதத்தைக் கிளைக்கதைகள் பலவற்றைச் சேர்த்து விரிவாகக் கூறப்பட்டுள்ளது. மகாபாரத நூலில் கூறப்பட்டுள்ள பாண்டவர்கள், துரியோதனாதியரின் பகைவளர்ந்ததாக ஏற்பட்ட விதத்தையும், துரியோதனன் போரில் இறப்பதற்குக் காரணமாக இருந்த இரண்டு சாபங்களையும் காண்போம்.

பகைமை வளர்ந்த விதம் :

சந்திரகுலத்தில் பிறந்த விசித்திர வீரியனுக்குப் புதல்வராகப் பிறந்தவர்கள் திருதராஷ்டிரனும், பாண்டவரும் ஆவர். திருதராஷ்டிரனுக்குப் பிறந்தவர்கள் துரியோதனாதியர் நூற்றுவர். பாண்டுவுக்குப் பிறந்தவர்கள் தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் ஆகிய ஐவராவர். இவ்விரு தரத்தினருக்கும் சிறுவயதிலிருந்தே பகைமை சிறுக சிறுக வளர்ந்து கொண்டே வந்தது. பிறகு இவ்விரு தரத்தாரும் தமது அம்மான் மூலமாக சூதாட்டம் ஆடினர். அம்மான் சகுனி மூலமாக சூதாட்டத்தில் வெற்றி பெற்ற துரியோதனன் 12 வருஷம் வனவாசமும், ஒரு வருஷம் அஜ்ஞாத வாசமும் செய்து பின் திரும்பி வந்தால் அவர்களுக்குரிய நாட்டைக் கொடுப்பதாகச் சொன்னான். அதன்படி 13 ஆண்டுகள் கழித்தபின் பாண்டவர்கள் உலூக முனிவரை தமக்கு உரிய இராச்சியத்தைக் கொடுக்கும்படி துரியோதனனிடம் தூதாக அனுப்பினர். பாண்டவருக்குரிய நாட்டை துரியோதனன் திருப்பிக் கொடுக்க மறுக்கவே இரு தரத்தாருக்கும் போர் ஏற்பட்டது. துவாரகையில் உள்ள ஸ்ரீகிருஷ்ணனின் உதவியை கோருவதற்காக தருமனும், துரியோதனனும் அவரிடம் சென்றனர். ஸ்ரீகிருஷ்ணன் தந்திரமாக யாதவ சேனை அனைத்தையும் போரிட துரியோதனனுக்கு அனுப்புவதாகவும் தான் ஒருவன் மட்டும் பாண்டவர் பக்கமிருந்து போரிடப்போவதாக அறிவித்தார். பின்பாண்டவருக்காக ஸ்ரீகிருஷ்ணன் துரியோதனனிடம் சென்று அவர்களுக்குரிய நாட்டைக் கேட்டார். தூதாக வந்த ஸ்ரீகிருஷ்ணனை துரியோதனன் இழிவாகப் பேசியதுடன் அவரைக் கொல்லவும் சதி செய்தான். ஸ்ரீகிருஷ்ணன் தன் சக்தியால் விசுவரூப மெடுத்து அங்கிருந்து தப்பி வந்து பாண்டவர்களிடம் நடந்த விவரத்தைக் கூறினார். பின்பு பாண்டவர் ஏழு அக்ஷௌகினி சேனையையும் கௌரவர் பதினோரு அக்ஷௌகினி சேனையையும் திரட்டிக்கொண்டு உக்கிரமாகப் பெரும்போர் செய்யத் தொடங்கினார்கள்.

பதினெட்டு நாள் போர் :

பாண்டவர்கள் படைக்கும், துரியோதனனது படைக்கும் பெரிய பெரிய யுத்தம் பதினெட்டு நாட்கள் நடந்தன. பாண்டவர் பக்கம் விராட குமாரனான சுவேதன் முதல்நாளில் நடந்த போரில் இறந்துவிட்டான். இரண்டாம் நாள் முதல் துருபத குமாரனான த்ருஷ்டத்யும்நன் சேனாதிபதியாக இருந்து பதினெட்டு நாள் வரையில் போரிட்டான். துரியோதனன் பக்கம் முதல் பத்து நாள் வரை பீஷ்மர் சேனைத் தலைவராயிருந்து சிகண்டியால் இறந்தார். அதன்பின் சேனைத் தலைவ்னாக வந்த கர்ணன் பதினேழாம் நாள் அருச்சுனனின் அம்பால் இறந்தான். பதினெட்டாம் நாள் துரியோதனன் மட்டும் வீமனுடன் போரிட்டு அவன் கதையால் தாக்கப்பட்டு இறந்தான். இவ்வாறாக 18 நாட்கள் பெரும்போர் நடந்தது. இறுதியில் தருமர் வெற்றிபெற்று

இழந்த நாட்டை மறுபடியும் ஸ்ரீகிருஷ்ண பகவான் உத வியால் பெற்றார்.

### துரியோதனன் பெற்ற சாபங்கள் :

வஞ்சனை மிகுந்த துரி யோதனன் இறந்து போவ தற்கு அவன் பெற்றுள்ள இரண்டு சாபங்களே கார ணங்களாகும். பாண்டவர்களின் மனைவி திரௌபதையைத் துரி யோதனன் தம்பி துச்சாத னன் பலர் கூடியுள்ள அரச சபையில் துகிலுரித்து மான பங்கம் செய்தபோது அச்சபை யில் திரௌபதை தன் கூந் தலை விரித்து துரியோதன னது இரத்தத்தால் என்கூந் தல் மீது தடவியபின்பே என் கூந்தலை முடிப்பேன் அது வரை முடியேன் எனச் சபத மிட்டாள் வீமனும் அச்சபையில் என் கதாயுதத்தால் துரியோத னனைக் கொல்வதாக சூளுரை செய்தான். இது துரியோத னன் பெற்ற ஒரு சாபமாகும்.

குசேல முனிவரது குமார ரும் பராசர முனிவரது மாண வருமான மைத்திரேய முனி வர் துரியோதனுக்கு வில் வித்தை முதலியவற்றைக் கற் றுத்தந்தார். துரோணர், கிரு பர் பரசுராமர் ஆகியோரைப் போல் மைத்திரேய முனிவ ரும் வில்வித்தையில் சிறந்த வர். துரியோதனன் அம் முனிவர் சொல்லிய வித்தைக ளைக் கற்காமல் அவரைக் கேலி செய்தான். அதனால் கோபம் கொண்ட மைத்திரேய முனி வர் துரியோதனன் மீது கடுங் கோபம் கொண்டு வீமனின் கதையினடியால் நீ தொடை பிளந்து இறப்பாய் என்று சாப மிட்டார். துரியோதனன் இறப் பதற்கு இது இரண்டாவது சாபமாகும்.

### முடிவுரை :

பாண்டவர்களின் மனைவியா கிய திரௌபதையைப் பலர் கூடியுள்ள சபையில் துகி லுரிந்து அவமானப் படுத்திய துரியோதனனும், துச்சாதன னும் அவள் கோபத்திற்கு ஆளா கிவிட்டனர். பத்தினிப் பெண் ணூன திரோபதையின் சாபத் திற்கும் ஆளாயினர். அதே போல சிலப்பதிகார நூலிலும் தம் கணவன் கோவலனை ஆரா யாமல் கொன்ற பாண்டி யன் நெடுஞ்செழியன் ஆண்ட மதுரை மாநகரைக் கண்ணகி யாகிய பத்தினிப்பெண் சாப மிட்டு எரித்ததை ஈண்டு நோக் கற்பாலது. பத்தினிப் பெண் டிரை தெய்வமும் போற்றும் என்ற நீதியை அனைவரும் அறி வர். துரியோதனன் ஸ்ரீகிருஷ் ணனை அவர் தூதாகச் சென் றபோது இகழ்ந்து பேசியதோ டன்றி அவரைக் கொல்லவும் சூழ்ச்சி செய்தான். மாணவர்க ளுக்கு வித்தைகளைக் கற்றுக் கொடுத்த மைத்திரேய முனி வரைக்குரு என்றும் பாராமல் துரியோதனன் அவரைக் கேலி செய்து அவர் சாபத்துக்கு ஆளானான். 'ஓரெழுத்தொரு பொருள் உணரக்கூறிய அச்சிரெ ழுத்தாளனைச் சிதையச் செப்பி னோர், பாரினிற்கிருமாய்ப் படி வர் மண்ணிலே" என்ற திரு மூலரின் வாக்குப்படி துரியோ தனன் குருவாகிய மைத்திரே யர் கோபம் கொள்ளும்படியாக இகழ்ந்து பேசி அவர் சாபத் துக்கும் ஆளானான். துரி யோதனன் அழிவிற்கு அவன் செயல்களே காரணமாயின என் பதை ஸ்ரீவில்லிபுத்தூராழ் வார் தம் பாரத நூலில் விவ ரித்துக் கூறியுள்ளார். பத் தினிப்பெண்ணூன திரௌபதை யின் சாபமும், குருவாகிய மைத் திரேய முனிவனின் சாப மும் காரணங்களாகி துரியோ தனன் வீமனுடைய தண்டாயு தத்தால் பதினெட்டாம் நாள் நடந்த போரில் உயிரிழந்தான் என்ற வரலாறை நாம் பாரத நூல், வாயிலாக அறிகிறோம் அல்லவா!! மேலும் பத்தி னிப் பெண்களை அவமானம் செய்வதும், கல்வியைக் கற்றுக் கொடுக்கும் குருவைப் பழிப் பதும் ஒருவனுக்கு அழிவைக் கொடுக்கும் என்ற நீதியையும் நாம் அறிகிறோம் அல்லவா! *

## சப்த ரிஷிகள்

சப்த ரிஷிகளாகிய அகத்தியர், ஆங்கிரீசர், கௌதமர், காசி பர், புலத்தியர், மார்க்கண்டர், வசிட்டர் ஆகிய இவர்களுக்கு முருகப் பெருமானே திருமூர்த்தியாக எழுந்தருளி உபதேசித்தார், இதனையே,

வசிட்டர், காசிபர், தவத்தான யோகியர்
அகத்ய மாமுனியிடைக் காடர் சேனும்
வகுத்த பாவினில் பொருட் கோலமாய் வருமுருகோனே"

என்று அருணகிரியார் திருப்புகழில் கூறியுள்ளார்.

இரா. தெய்வ வீர லெக்ஷ்மி - தூத்துக்குடி.

# நலம்தரும் நாராயண எனும் நாமம்

திரு. ஜி. ஆர். சுப்பிரமண்யன் - மதுரை.

மற்ற எல்லா சமயங்களை யும் போலவே இந்து சமயமும் கடவுள் ஒன்றே என்றே கூறுகிறது. ஆனால் அதே சமயம் அவருக்கு அளவற்ற வடிவங்கள், பெயர்கள், அவதாரங்களைக் கூறுகிறது.

"ஒருநாமம், ஓர் உருவம்
இல்லானுக்கு
ஆயிரம் திருநாமம் சொல்லி
தென்னேனம் கொட்டாமோ"

எந்த வடிவத்தில், எந்தப்பெயரில், எந்த அவதாரத்தில் வணங்கினாலும், வணங்கு பவர்கள் அனைவரும் ஒன்றாக இருக்கின்ற அந்த மேலாம் ஒரே பரம் பொருளையே அடைகிறார்கள்.

"ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி" அந்த ஒரே இறைவனைத் தான் மனிதர்கள் பல வாறாகச் சொல்கிறார்கள் வழிபடுகிறார்கள். கீதையில் கண்ணனும், "யார் எந்தந்த வடிவில் பக்தி சிரத்தையோடு, உளமுருகி என்னை வணங்குகிறார்களோ, அவர்களுடைய சிரத்தை காரணமாக, அவர்கள் விரும்பும் வடிவமாகவே காட்சி தருகிறேன்" என்று கூறுகிறார்.

ஆதிசங்கர பகவத் பாதாள் நாம் உய்யுமாறு இந்தப் பர தத்துவத்தைப் பாமர மக்கள் புரிந்து கொண்டு எளிதில் அவனை வழிபடுமாறு விண் மத ஸ்தாபனம் செய்தார். சிவ வழிபாடு சைவம் என்றும், விஷ்ணுவை ஆராதித்தல் வைணவம் என்றும், சூரியனை வணங்குதல் சௌரம் என்றும், விநாயகப்பெருமானை வணங்குவது காணபத்யம் என்றும், முருக பக்தியைக் கௌமாரம் என்றும், சக்தி வழிபாட்டை சாக்தம் என்



றும் அறுகூறாக வகுத்துக் கொடுத்தார்.

"ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்" என்பது உண்மை. நானே பல வாகத் தோன்றி பிறப்புக் கொள்வேன்.

"யஸ்ய ப்ருத்வீ சரீரம் யப்ருத்வீம்
அந்தரே ஸஞ்சரஞ்
யம் ப்ருத்விந் வேத! ஸர்வ
பூ தாந்தராத்மா
அபஹத பாப்மா திவ்யோ
தேவ ஏகோ நாராயண:"

இம்மண்ணுலகில் சஞ்சரிக்கும் அவனது உடலே இவ்வுலகு உலக வஸ்துக்கள் அவனை அறியவில்லை. எல்லா ஜீவ ராசிகளிடையேயும் உள்நின்று உளவுபவன் அவனே எந்த பாபத்தின் மாசும் அவனைத் தீண்டாது. அவன் ஒருவனே நாராயணன்.

அந்தப் பரம்பொருள் ஒன்றே சத்யம் நித்யம் மாறுதலற்றது. ஞானமயமானது. கால தேசவர்த்தமானத்துக்கு அடங்காதது. அனந்தமானது. எங்கும் வியாபகமானது. "விபு:" எல்லாம் உணர்ந்தது. (சர்வக்ஞன்)

மறையாய், மறைபொருளாய், விளங்கும் அங்கெண்ணுதபடி எங்கும் ப்ரகாசமாய், ஆனந்த பூர்த்தியாக விளங்குபவன் அவனே.

எங்கும் எக்காலத்தும் வியாபித்துள்ள இந்தப் பரதத்துவத்தை சாதாரண யோகத்தின் மூலம் அடைவது கடினம். அது முரட்டுத்தனமான மாட்டை அடித்து அடக்குவதற்குச் சமம். ஆனால், புல் முதலியன காட்டி மாட்டை வசப்ப

டுத்துவது போல் பக்தி ஒன்றினால் அவனை எளிதில் கட்டிப் போட்டுவிடலாம். இதைத்தான் சகாதேவன் கண்ணனிடம் எடுத்துச் சொல்கிறான்.

அவனது நாம ச்ரவணம், நாம சங்கீர்த்தனம், ஸ்மரணம், அர்ச்சனை, வந்தனம், ஆத்ம நிவேதனம் என்று இவ்வாறாக அவனை எந்தவிதத்திலும் வழிபடலாம்.

"ச்ரவணம், கீர்த்தனம், விஷ்ணோ:
ஸ்மரணம்
பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம்
தாஸ்யம்
பொக்யம், ஆத்ம நிவேதனம்
இதி பும்ஸா அர்பித: விஷ்ணோர்
பக்தி: சேத் நவலக்ஷணா"

இவ்வழிகளில் அவனை வழிபட்டு அவன் அருளைப்பெறலாம்.

## நலம் தரும் சொல்

அவனது நாமத்தை உச்சரித்தால் குலம் தரும், செல்வம் தந்திடும், அடியார்கள் துயரமெல்லாம் தூசாய்ப் பறந்தோடும் நலம் தரும்.

"குலந்தருஞ் செல்வந் தந்திடு
மடியார்
படுதுயராயின வெல்லாம்
நிலந் தரஞ் செய்யும்
நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும்
பெற்ற
தாயினு மாயின செய்யும்
நலந் தருஞ் சொல்லை நான்
கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்"

என்று பெரிய திருமொழி வாயிலாக எல்லாவற்றையும் தரவல்ல திருமந்திரத்தின் பெருமையை (திருவெட்டெழுத்தெனும் அஷ்டாக்ஷர மகிமையை) திருமங்கையாழ்வார் நமக்குச் சொல்கிறார்.

இந்த நலம் தரும் நாராயணா எனும் நாமத்தின் பெருமையை உணர்ந்ததாலன்றோ ஸ்ரீராமானுஜர் பரம கருணையோடு உலக மக்கள் எல்லாம் உய்யவேண்டும் என்று குருவின் ஆணையையும் மீறி, ஆண்டவன் திருக்கோயில் கோபுரத்தின் மீது ஏறி வன்மீன் உலகியலீர்! உங்களுக்கு அமிர்தமென அருஞ் சொல் மந்திரத்தை யான் உரைப்பன் கேளீர் என்று அருளிச்செய்தார்.

"அவிகாராய சுத்தாய நித்யாய
பரமாத்மனே
ஸவிதக ரூப ரூபாய விஷ்ணவே
சர்வ ஜிஷ்ணவே"

மாறுதலற்றவனும், தூயோனும், நித்தியனும், பரமாத்மனுமான, எப்பொழுதும் ஏகரூபனாய், யாவற்றையும் வெல்லும் சர்வ சக்தி மானாய் விளங்கும் மகாவிஷ்ணுவை வணங்குகிறேன்.

--விஷ்ணு புராணம்.

## வேதகாலம் தொட்டு

அந்த விஷ்ணு வழிபாடு - வைணவம் - நம்பாரத திருநாட்டில் தொன்மைக்காலம் தொட்டே இருந்து வருகிறது. வேத காலத்தில் விஷ்ணு - திருமால் தெய்வமாகப் போற்றப்பட்ட செய்திகள் நமக்குக் கிடைத்துள்ளன.

"விசக்ரமே ப்ருத்வீம் ஏதாம்:
க்ஷேத்ராய விஷ்ணுர் மதுஷேத
சஸ்யந்!
த்ருவாயோ அஸ்ய திரயோ ஜநாஸ
உருக்ஷிதம் ஸுனாதிமா சகார!"

இவ்விஷ்ணுவே இம்மண்ணுலகை அளந்தார். அதை மனிதருக்கே வழங்கினார். மக்கள் அவ்வாறே புகலாகக் கொண்டனர். அம்மாலவன் இவ்வுலகினை அகலிடமாக்கினார் என்று ரிக்வேதம் கூறுகிறது.

விஷ்ணு என்பது "விஷ்" என்ற பகுதியைக் கொண்டது. அதாவது எங்கும் வியாபித்திருப்பவன் என்பது பொருள். விஷ்-வியாப நேருக் - விஷ்ணு: மூன்று அடிமண் கேட்டு இவ்வுலகையளந்த கடவுளை திரிவிக்கிரமன் என்றே புகழ்கின்றோம்.

அவனே சூரியனின் ஒளிக் கதிராக ஓம் பூ: புவ: ஸுவ: என்று எங்கும் பாய்ந்து வருவதால் அந்த ஞானபானுவே (சூரியனே) விஷ்ணுவாகின்றான். ஆகவேதான் அவனை சூரிய நாராயணன் என்றே வழிபடுகின்றோம். இதைத்தான் புருஷ ஸுக்தம் நமக்கு காட்டுகிறது.

வேதாஹ மேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்ய வர்ணம் தமஸஸ் பரஸ்தாத்
தமேவ வித்வா னம்ருத இஹபவதி
நாந்ய பந்தா வித்யதே அயநாய

இவனை அறிந்தால் தான் நாம் சாவிலிருந்து மீண்டு மீளாப்பதம் அடைவோம். இக்கருத்தையே கீதையும்

ஸர்வஸ்ய தாதானம்
அவிந்த்ய ரூபம்
ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்

என்கிறது.

## விஷ்ணுவே ஆத்ம சரீரம்

விஷ்ணுவே நமது ஆத்ம சரீரம். விஷ்ணுவின் நாபியிலிருந்து நான்முகன் அவதரித்ததாக சொல்வது எதைக் காட்டுகிறது.

நாபியிலிருந்துதான் எண்ணங்கள் உதிக்கின்றன. எண்ணங்கள் உற்பத்

தியாகும் இடத்தை அடைந்துவிட்டால் மனம் அடங்கிவிடும். எனவே மானுட சரீரத்தில் எண்ணங்களின் பிறப்பிடமான நாபியிலிருந்து புத்தி என்னும் பிரம்மா தோன்றியிருக்கிறார் என்பது இந்து மதம் விளக்குகிறது.

தாயையும், சேயையும் இணைத்து, காற்றையும், உணவையும் அளித்து, சேயைக் காப்பாற்றுவது இந்த நாபிக் கொடியே. அந்தத் தொப்புள் கொடி அறுபடாதவரை சேய்க்குத் தனியான எண்ணங்கள் எழுவதில்லை.

இந்த விளக்கத்தை நமக்கு காட்டவே அறிவுத் தெய்வமான படைக்கும் கடவுள் (பரமன்) காத்தல் தெய்வத்திலிருந்து (விஷ்ணு) விளைவதாகக் காட்டப்படுகிறது.

## செல்வத்தின் நாயகி

நாராயணன் காக்கும் கடவுள் அல்லவா? உலகோருக்குத் தேவையான உணவு மற்றும் பொன்னையும், பொருளையும் மற்ற எல்லாவற்றையும் அளித்து ரக்ஷிப்பவர்கள் அவனே. ஆகவேதான், இவற்றை அளிக்கும் சக்தியை (லக்ஷ்மியை) தன் இதயத்தில் அவள் வைத்திருப்பதாக சித்திரிக்கப்பட்டுள்ளது. அந்த சக்தியே தனலக்ஷ்மியாக தான்ய லக்ஷிமியாக, சந்தான லக்ஷ்மியாக, இப்படி பல ரூபங்களில் காட்சி தருகின்றாள்.

பொன்னையும், பொருளையும் பெட்டகத்தில் தானே பூட்டி வைப்பார்கள். ஆகவேதான் செல்வத்தின் நாயகியான திருமகளை திருமால் தன் திருமார் பாகிய பெட்டகத்தில் வைத்திருப்பதாகச் சித்திரிக்கப்படுகின்றார். பணம் சேதனப் பொருள் அது அலைபாயும் தன்மையது. ஆகவேதான் லக்ஷ்மியை அலைமகளாகக் காட்டியிருக்கிறார்கள் நமது பெரியோர்கள்.

## அத்வைதமும், விசிஷ்டாத்வைதமும் போற்றும் கடவுள்

யானே எல்லாம், யானே கடவுள் என்று 'தத்யேஹம், ஸோஸெள ஸோஸெள ஸோஹமஸ்மி' என்று அத்வைதமும், 'ப்ருத காத்மானாம் ப்ரேரிதாரம் சமத்வாஜுஷ்ட ஸ்ததஸ் தேநாம் ருதத்துவும் ஏபி' என்று விசிஷ்டாத்வைதமும் எங்கும் வியாபித்துள்ள இந்த விஷ்ணுவின் பெருமை பேசுகிறது.

மாநிலம் சேவடியாகத் தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கையாக
விசும்பு மெய்யாகத் திசை
வகையாகப்
பசும் கதிர் மதிய மொடு
சுடர்கண்ணுக

இயற்கையெல்லாம் பயின்று அகத்தடக்கிய வேத முதல்வனாக தமிழ்நூலான நற்றினைக் காப்புச் செய்யுள் சித்தரிக்கிறது.

இந்த விஷ்ணுவை எந்தப் பெயரிட்டும் அழைக்கலாம். சார்வ பௌமனான அவனே நாராயணன். வாஸுதேவன். அக்னியும் அவனே இந்திரனும் அவனே. ஆதித்யனும் அவனே.

அஹம் ஸர்வஸ்ய ப்ரப வோமத்த:
ஸர்வம் ப்ரவர்த்ததே!
இதிமத்வா பஜக்தே மாம்புதா
பாவ ஸமன் விதா:

என்று கண்ணனே கீதையில் குறிப்பிடுகிறார்.

(நானே அனைத்தின் பிறப்பிடம். யாவும் என்னிடத்திருந்தே விரிகின்றன. இதை அறியும் ஞானிகள் என்னை அன்புடன் வழுத்துகின்றனர்.)

அவனது திருமேனியை (பராவிக்ரஹ:) வைகுண்டத்தில் அவன் காட்சி தரும் கோலம் எல்லாவற்றையும் நமது இதிகாச புராணங்களும், திவ்யப் பிரபந்தங்களும் விதவிதமாக வர்ணிக்கின்றன.

அவனுடைய வ்யூக விக்ரஹம் மூன்று விஷ்ணு லோகங்கள் - ஆமோதம், புவனம், ப்ரமோதம் - ஸத்ய லோகமான வஸ்து பிரபஞ்சத்தில் உள்ளன. அவன் இவ்வுலகில் ஸங்கர்ஷணகவும், ப்ரத்யும்நனாகவும், அநிருத்தனாகவும் தோற்றம் கொள்கின்றான். நின்ற நெடுமாலாய், பாம்பணையில் படுத்து யோகத்துயில் கொள்ளும் பரந்தாமனாய், மண்ணையும், விண்மையுமளந்த திரிவிக்ரமனாக, லோகரக்ஷகனாக, வைகுண்டபதியாக, வாஸுதேவனாக பக்தர்களுக்கு காட்சி தருகின்றான்.

அவனையே பரந்தாமனாக வழிபட்டு உயர்ந்தவர்கள் மயர்வற மதிநலம் மிக்க ஆழ்வார்கள் இறைவனின் லீலாரஸங்களை நன்கு அனுபவித்து, ஆழ்ந்து, தோய்ந்து ஆனந்தக் களிப்பில் திளைத்தவர்கள் வைகுண்டநாதனின் புகழ் பாடிப் பரவியவர்கள். 108 திவ்ய தேசங்களின் பெருமைகளையும், ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீய: காந்தனார் வைபவங்களை, புகழினைப் பரப்பிய பாசுரங்களே நாலாயிர திவ்யப்பரபந்தங்களாக இன்னும் வைணவப் பெருமக்களாலும் ஏனைய பக்த சிரோமணிகளாலும் அன்றுடம் பாடிப்பரவசம் எய்தும் அருளமுதமாகும்.

"அவரவர் தமதமது அறிவு
வகை வகை
அவரவர் இறையவர் என
அடி அடைவார்கள்
அவரவர் இறையவர்
குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய
நின்றுரே"

என்றும்,

பேரும் ஓர் ஆயிரம் பிற
பல உடைய எம்பெருமான்
பேரும் ஓர் உருவமும் உளது இல
இலது பிணக்கே"

என்றும் நம்மாழ்வார் பலபடியாக ஸ்ரீமகாவிஷ்ணுவின் தன்மைகளைப் பராட்டுகிருர்.

அழிந்திடும் அற்ப மனிதர்களைக் கற்பகமே! ரக்ஷகனே! என்று உரைக்கும் அறிவிலிகாள் நாராயணன் நாமம் நன்குரைத்து நற்பயன் பெற்றிடுவீர். சொன்னாலும் நன்மை தரும். சிந்தித்தாலும் உயர்வு தரும். பாவம் நீங்கும். உளமுருகிக் கூறினால் உற்ற துயர் அனைத்தும் தூசாய்ப் பறந்தோடும்.

அழைமின்! துஞ்சும் போதாவது அழைமின்! நாராயணு எனக் கூறுமின்! என்று நலம் தரும் நாராயணனின் நாமத்தை நாவாறக் கூறுமாறு திருமங்கையாழ்வார் நம்மை எல்லாம் கேட்டுக் கொள்கிருர்.



# நற்சங்கு - பாஞ்சசன்னியம்

திரு. ராஜம் ரெங்கசாமி - சென்னை.

மாந்தர்கள் அணிந்து கொள்ளும் முத்து, பவழம் போலவே இச்சங்கும் கடலிலிருந்து பிறந்தது. சங்கு என்று சொல்லும் பொழுதும், அதை பார்க்கும் பொழுதும் பகவானை நினைக்கிறோம். பரமனின் பஞ்சாயுதங்களில் ஒன்று இத்தூய நற்சங்கு. பல பல திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் பரமன் சாலபெரும் சங்கை தனது இடது கரத்தில் அமைத்துக் கொண்டு யாவருக்கும் தனது திவ்ய தரிசனத்தை அளித்து காத்து வருகிறான்.

பகவான் இராமாவதாரம் எடுத்த சமயத்தில் அவனின் தூய நற்சங்கே நற்பண்பாடுகளுடன் தம்பி பரதனாக அவதரித்தது. இராமாயணத்தில் பரதனின் தூய்மைக்கு எவரும் ஒப்பாகார். சங்கின் அம்சமான பரதன் ராமனது பாதுகைக்கு அபிஷேகம் செய்து, பரமனது திருவடி ப்ரபாவத்தை உலகிற்கு காட்டி அருளினான் என்றால், என்னே தெய்வத்தன்மை பொருந்தின சங்கின் பெருமை.

"கெட்டாலும் மேன்மக்கள்
மேன் மக்களே,
சங்கு சுட்டாலும் வெண்மைதரும்"

என்ற சொல்லிற்கு ஏற்ப தனது பரிசுத்தமான வெண்மை நிறத்தை சங்கு ஒருபொழுதும் இழப்பததில்லை, தனது தரத்திலிருந்து ஒருவிதமாற்றமுமில்லாத, புகழ்வாய்ந்த இச்சங்கிற்கு,

"படைபோர்புக்கு முழங்கும்
அப்பாஞ்சசன்னியமும்
பல்லாண்டே"

என்று பெரியாழ்வார் பல்லாண்டு பாடி இருக்கிறார். தர்ம க்ஷேத்திரத்தில் பகவானின் திருவாயில் அமர்ந்துகொண்டு ஜயத்வனி கொடுத்தது இவ்வீர சங்கல்லவா?

கோதையும் தனது திருப்பாவையில், நோன்புக்கு வேண்டிய உபகரணங்களை பகவானிடம் யாசிக்கும்பொழுது, பாலன்ன வண்ணத்துன் பாஞ்சன்னியத்தை (சங்கை) அருள வேண்டுமென்று கேட்கிறாள்.

பரமனை அடைய மேகத்துடனும், பறவைகளுடனும் எல்லாம் தூது அனுப்புகிறாள் ஆண்டாள். அதன்பின் பரமனைவிட்டு ஒருசமயமும் பிரியாத பெருமைவாய்ந்த தெய்வீக சங்கை அழைத்து, விரக தாபத்துடன் கூறுகின்ற பத்து பாசுரங்கள் மிகவும் ரஸிக்கத்தக்கது. அதில் ஒன்று இரண்டை நாம் இங்கு காண்போம்.

"கருப்பூரம் நாறுமோ, கமலப்பூ
நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய் தான்
தித்தித் திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன்றன்
வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன்
சொல் ஆழிவெண் சங்கே"

என்று பரமனுடன் மிக்க ஈடுபாடுடன் அமர்ந்திருக்கும் சங்குடன் கேட்கிறாள்.

அதன்பின் சங்கின் ப்ரகாசமான வெண்நிறத்தைக் கண்டு,

"சந்திர மண்டலம் போல்
தாமோதரன் கையில்
அந்தரம் ஒன்றின்றி யேறி,
யவன் செவியில்
மந்திரம் கொள்வாயே போலும்
வலம் புரியே
இந்திரனும் உன்னோடு
செல்வத்துக் கேலானே"

என்று சங்கினோடு தனக்கு அமைந்த ஸ்வாதீன மனப்பான்மையை தெரியப்படுத்துகிறாள். சந்திர மண்டலத்திற்கு ஒப்பாக ப்ரகாசிக்கும் வெண்சங்கு பரமனது திருக்கையில் அமர்ந்து

## பஞ்ச மகா யாகங்கள்

இல்வாழ்வில் ஈடுபடுபவர்களுக்கு அவசியம் செய்யத்தக்க ஐம்பெரும் வேள்விகள்:

1. பிரம்ம வேள்வி - வேத மோதல்
2. பிதிர் வேள்வி - பிதிர் கடனாற்றல்
3. தேவ வேள்வி - தேவதைகள் குறித்து தீ வேட்டல்
4. பூத வேள்வி - காக்கைக்கிடுதல் முதலியன
5. மானுட வேள்வி - விருந்தோம்பல்

இரா. தெய்வ வீர லெக்ஷ்மி - தூத்துக்குடி.

கொண்டு பரமனது செவியில் மந்திரம் கொள்வதாக பேசுகிருள். பெருமைவாய்ந்த சங்கு பரமனது திருபவளம் போன்ற உதடில் அமர்ந்து மதுசூதனின் வாய் அமுதம் பண்நாளும் உண்பதாக சங்கிற்கும், பரமனுக்கும் உள்ள தொடர்பை உரைக்கிருள்.

சங்கு சக்கர கதாபரணே என்று பீஷ்மரும் சங்கை முன்னிட்டு கொண்டு கண்ணனை அழைத்து இருக்கிருர்.

துரியோதனன் சபையில் தனக்கு மானபங்கம் ஏற்படாமல் காப்பாற்றும்படி

"சங்கு சக்கர கதா பரணே
துவாரக நிலைய அச்சுதா
கோவிந்தா புண்டரீகாக்ஷ
ரதமாம் ச்ரணுகதம்"

என்று திரௌபதி மனமுறுகி சங்கை முன்னிட்டு கொண்டே பகவானை ப்ரார்த்தித்திருக்கிருள்.

நம் தேசத்தில் எல்லா ஆலயங்களிலும் களையிருளகன்று குணதிசையில் கதிரவன் உதித்து வர, புள்ளினங்கள் கீசு கீசு என்று சப்திக்க மங்கள சங்கை முழங்குவார்கள். அதன் பிறகு தேவாதிதேவனின் ஸன்னதி திறக்கப்படுகின்றது. பரமனுக்கு அபிஷேகம் செய்யும் பொழுது தூயநற்சங்கில் தீர்த்தம் எடுத்து அபிஷேகம் செய்கிருர்கள். சங்கை எடுத்து அபிஷேகம் செய்த தீர்த்தத்தை நாம் ப்ரோக்ஷணம் செய்து கொண்டால் உடல் தூய்மை, மனத்தூய்மை எல்லாம் ஏற்படும் ஆரோக்கியமாக வாழலாம்.

நம் வீடுகளில் பரமனை எழுந்தருளி பண்ணி இருக்கும் அறையில் பவித்திரமான திருசங்கையும் பரமன் அருகில் எழுந்தருளப்பண்ணி,

"விஷ்ணோர் முகோத்தாநில
பூரிதஸ்ய
யஸ்ய த்வநிர் தானவ தர்ப்பஹந்தா
தம் பாஞ்சஜன்யம் ஸஸிகோடி சுப்ரம்
ஸங்கம் ஸதானம் சரணம் ப்ரபத்யே"

என்று சங்கையும் ப்ரார்த்தித்துக் கொண்டால் ஸகல க்ஷேமத்தையும் அடையலாம்.



## அறக்கடவுளின் தீர்ப்பு

இப்பூவுலகில் ஒருவனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தனர். அவ்விரு மனைவிகளில் ஒருவள் தெய்வபக்தியுடன் தருமத்தைச் செய்யக் கருதுகிறவள். தன் கணவனை மதிக்காது தேவதைகளிடம் பக்தி வைத்து வழிபட்டு பெரிய தருமங்களைச் செய்து வந்தாள். மற்ருெருவள் தன் கணவனைப் பற்றியே (தருமஞ்செய்ய) நினைத்து அவனையேத் தெய்வமாகக் கொண்டு அவனது விருப்பங்களை பூர்த்தி செய்து வந்தாள். நாயகனின் சொல்லையே வேதவாக்காகவும், அவனது பாதசேவையே தேவதா சேவையாகவும் எண்ணி பதிபக்தியில் மூழ்கியிருந்தாள். பின்னர் அவர்களுக்கு இறப்பு நேர்ந்தது. பரலோகம் வழியாக இவ்விரு பெண்மணிகளும் சென்றனர்.

தன் கணவனின் மீதும் பற்றுடன் தெய்வமாகக் கருதியவள் புண்ணியலோகம் செல்ல, தெய்வப்பற்றுள்ளவள் அங்கேயே நின்றுவிட்டாள். பின் வேதனையுடன் அழுதாள். இயமன் அவளைப் பார்த்து ஆறுதல் கூறினான். மேலும் இயமன் அவளிடம் பெண்ணுக்கு கணவனே தெய்வமாக எல்லா தேவதைகளாலும் விதிக்கப்பட்டிருக்கின்ருள். எனவே கணவனை அவமதித்த பின் புண்ணியலோகம் போக முடியாது என்று கூறினான். கணவனாகிய தெய்வத்தை வீட்டில் வைத்துவிட்டு வேறு தேவதைகளைத் தேடி அலைந்ததால் புண்ணியலோகம் கிடையாது என்றும் கணவனுக்குரிய தர்மத்தை செய்துப் பின்னர் வருக என அவளை அனுப்பிவைத்தாள். அறக்கடவுள் கூறிய இச்சம்பவம் ஒன்ருனது.

வருதி நீ மடந்தை மீண்டுலசெய்தி வளருடற்ருங்கி நாயகன் பாற்
சுருதியன் புடையளாகியங் கணவனைக் கடவுளாக் கருதி நற்கருத்திற்
புரிதியாங் கவன்றன் ருெழிலுயிர் கதியிற் புருவையென்றுரைத்து விட்டதன்ருன்
சுருதி களிதற்குச் சான்றென வுரைத்துத் தோகை மண்டி வையெலாஞ் சொன்னாள்

-மகாபாரதம்

திருமதி. இரா. தெய்வவீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

# நாலாயிரத்தில் பழமொழிகள்-குலசேகராழ்வார்

கோம்பூர் திரு. ஆர்.டி. சாரி - சென்னை.

(1) *"வங்கத்தின் கூம்பேறும்*
*மாப்பறவை போன்றேனே"*

மானிடப்பிறவிக் கடலில் சிக்கித் தவிக்கும் ஜீவாத்மாவான குலசேகரர் எம்பெருமான் திருவடியே சரண் என்று பற்ருமல் வேறெங்கு செல்வேன்? வித்துவக்கோட்டம்மானே! என்னும் பொருள் விளக்க இப் பழமொழியை ஆண்டுள்ளார். கரையோ, நிலமோ, காடோ தென்படாது நடுக்கடலில் சிக்கிக்கொண்ட பறவை அங்கு வந்துற்ற கப்பலின் பாய் மரக் கம்பத்தில் மேலே உள்ள பகுதியை மீண்டும் மீண்டும் சுற்றி வேறு வழியில்லாமல் கப்பலின் கூம்பை விட்டால் வேறு கதியில்லை என்பதை உணர்ந்தது. அவ்வண்ணமே, எம்பெருமானின் திருவடியைப் புகலிடமாகக் கொண்டபின் அதை விடுத்து எங்கு போய் உய்ய இயலும் என்கிருர் குலசேகரப் பெருமான்.

(2) *"அரிசினத்தால் ஈன்ற தாய்*
*அகற்றிடினும்-மற்றவள்தன்*
*அருள்நினைந்தே அழுங்குழவி"*

பெற்ற தாயானவள் சினங்கொண்டு தன் குழந்தையை வெறுத்து தள்ளினாலும், அக்குழந்தை தன் தாயாருடைய கருணையையே விரும்பி அழும். அதுபோல ஊழ்வினைப்பயனாகத் தருகின்ற துக்கத்தைப் போக்காவிட்டாலும், வித்துவக் கோட்டு எம்பெருமானே உனது திருவடிகளே தவிர எனக்கு வேறு புகல் ஏது? என்கிருர் ஆழ்வார.

(3) *"கொண்டானை யல்லால்*
*அறியாக் குலமகள் போல்"*

அவள் கணவன், மற்றவர் இழித்துக் கூறும் செயல் புரிந்தாலும் தன் கணவனையன்றி மற்ருேர் ஆண்மகனை மனத்தாலும் எண்ணுத கற்புக்கரசி போல, வித்துவக் கோட்டம்மானே உன் ஒருவனிடமே அடிமை பூண்ட யான், வேருெரு பகவானை எண்ணுது உன் திருவடிகளிலேயே, சரண் புகுந்தேன் என்கிருர் ஆழ்வார்..

(4) *"தார்வேந்தன் கோல் நோக்கி*
*வாழுங்குடி"*

மக்களைக் காப்பதற்கென்றே மாலை பூண்ட அரசன் தன் குடிகளைக்காக்காது என்ன துயர் கொடுத்தாலும் அவன் ஏந்திய செங்கோலையே பார்த்து வாழ்கின்ற மக்களைப் போல் வித்துவக் கோட்டம்மானே! நீ அருள் செய்யாமல் இருந்தாலும் உன்னையல்லால் வேறு ஒருவனை சரணடையேன் என்கின்ருர் குலசேகராழ்வார்.

<u>தெரிந்துகொள்ளுங்கள் :</u>

## பகவானின் குணங்கள் ஆறு

**1. வாத்ஸல்யம் (இரக்கம்) :**

பாசம் வைத்து இரட்சிக்கும் குணம் தாயன்பு.

**2. சுவாமித்துவம் (உறவு) :**

நாம் பாராமுகமாக இருந்தாலும் நம் காரியங்களைப் பூர்த்தி செய்துகொடுக்கும் குணம் உடையவன் என்ற உறவு.

**3. சௌசீல்யம் (தோழமை) :**

நம் சிறுமையையும் தன் மேன்மையையும், பார்த்துப் பின் வாங்காமல் மேல் விழுந்து வேற்றுமையின்றிக் கலக்கும் குணம்.

**4. சௌலப்யம் (எளிமை) :**

நாம் கண்டு களிப்பதற்குச் சுலபனாய் தன்னை தாழவிட்டு அர்ச்ச ரூபமாய் அமைந்த குணம்.

**5. ஞானம் (அறிவு) :**

விடவேண்டியவைகளையும் பற்றவேண்டியவைகளையும் ஒரே காலத்தில் அறிகின்ற அறிவைக் கொடுக்கும் குணம்.

**6. சக்தி (ஆற்றல்) :**

நித்திய சம்சாரிகளை நித்திய சூரியர்களோடு தான் நினைத்த நேரத்தில் ஒரு கோஷ்டியாகச் சேர்க்கும் வல்லமையுள்ள குணம்.

தொகுத்தவர்: திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

(5) "வாளால் அறுத்துச் சுடினும்
மருத்துவன்பால் மாளாத
காதல் நோயாளன் போல்"

உடல் நோய் அறுவைச் சிகிச்சைக்காக கத்தியாலே அறுப பதும், சுடுவதும் மருத்துவர் செயதாலும் அவர்பால் நீங்காத அன்புடைய நோயாளியைப் போல, வித்துவக்கோட்டம்மானே உன் மாயை தன்னால் என்றனக்கு நீங்காத துயர் தந்தாலும் உனக்கு அடிமையான யான் என் பிறவி நோய் அற்று சூடுபெற உன் கருணையையே நோக்கியிருப்பேன்.

(6) "செந்தழலே வந்து அழலைச்
செய்திடினும் செங்கமலம்
அந்தரம் சேர் வெங்கதிரோற்
கல்லால் அலராவால்"

கடுங்கிரணங்கள் கொண்ட கதிரவனை நோக்கி மலரும் அரவிந்தம் சிவந்த நெருப்பு அருகில் வந்து வெப்பங்கொடுத்தாலும், மலராது அதுபோலவே என் பாபங்கள் அனுபவித்து கழிய வேண்டியிருப்பதை வித்துவக் கோட்டம்மானே நீ போக்காவிடினும், உனது அறுதியிட முடியாத கல்யாண குணங்கட்கல்லாது வேறொன்றுக்கும் நெஞ்சுருகேன். இதன் பொருள் போலவே திருமங்கை மன்னன் பெரிய திருமொழியில் கூறுகிறார். "பிணியவிழ் தாமரை மொட்டலர்த்தும் பேரருளாளன்" என்கின்றார்.

(7) "தொக்கிலங்கி ஆறெல்லாம்
பரந்தோடி
தொடுகடலே புக்கன்றி புறம்
நிற்கமாட்டா"

ஆறுகள் சீறு கொண்டு வெள்ளப் பெருக்கில் பூமியெல்லாம் கரை புரண்டாலும், கடலையே சாரும். அதுபோன்றே வித்துவக்கோட்டம்மானே என் மனத்தில் வெள்ளமாய் பரந்த உன் கல்யாண குணங்களையே நாடுவேன்.

(8) "நின்னையே தான்வேண்டி நீள்
செல்வம் வேண்டாதான்
தன்னையே-தான் வேண்டும்
செல்வம்போல்"

மிக்க செல்வம் விரும்பாதவனுக்குத் தானாக வந்து சேரும் செல்வத்தைப் போல், வித்துவக் கோட்டம்மானே உன் மாயையினால் என்னை ஆதரிக்காவிடினும் உன் அடியானான யான் உன்னையே அடைய விரும்பி காலமெலாம் பற்றி நிற்பேன். தன்னைக் காற்கடைக் கொண்டவனை ஐஸ்வர்யம் விடாதது போல் என்கிறார் ஆழ்வார்.



## இல்லாளின் கடமை

"கொழுந னுண்ட பின் தானுகர் கொள்கையும்
விழிது யின்றபின் துஞ்சலு மென்றுயி
லெழுதன் முன்ன மெழுதலு மேயன்றே
பழுதிற் கற்புடைப் பாவையர் செய்கையே"

இப்பாடல் காசி காண்டத்தில் வருகின்றது. மாதர் தம் கணவன் துயிலிலிருந்து எழுவதற்கு முன்பாக தான் எழுந்து கை, கால், முகத்தை தூய்மை செய்த பின், தன் கணவனைத் தெய்வமாக நினைத்து, பக்தியுடன் அவனது திருவடிகளில் வீழ்ந்து வணங்க வேண்டும். கணவனுடைய திருவடிப் பூசையைக் காட்டிலும் சிறந்த தெய்வ பூஜை கிடையாது.

தனது கணவனுக்கு உணவு படைக்கும் சமயத்தில் அவன் அருகே அமர்ந்திருந்து பணிவுடன் உபசரித்து, தாய் மகனுக்கு உணவு ஊட்டுவது போன்று உணவளிக்க வேண்டும். கணவன் சாப்பிட்ட பின்தான் மனைவி சாப்பிடவேண்டும்.

இரவு நேரத்தில் தனது கையால் படுக்கை விரித்து கணவனை அப்படுக்கையில் உறங்குமாறு செய்ய வேண்டும். பின்னர் அவன் துயின்ற பின் தானும் உறங்க வேண்டும்.

உயிருக்கும், உடலுக்கும் பரஸ்பர நட்பு இருந்து வருகின்றது. உயிரால் உடல் பயன்அடைகிறது. உடலால் உயிர் பயனடைகிறது. எனவே கணவர் உயிர் என்றால், மனைவி உடலாகும். கணவன் மனைவி என்கின்ற இருவரும் பரஸ்பரம் அன்பும், ஆதரவும் இருக்க வேண்டும். பெண்கள் கணவனுடன் உயிருடன் உடம்பு போல் ஒருமித்து வாழ வேண்டும்.

திருமதி. இரா. தெய்வவீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினெட்டாம் அத்தியாயம்

## மோட்ச ஸந்நியாச யோகம்

உமைப்ரியன்

ஸர்வபூதேஷு யேனைகம்
பாவமவ்யயமீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஞானம்
வித்தி ஸாத்விகம் ॥ (20)

"வேறுபட்டு விளங்கும் பூதங்களில், வேறுபடாத, அழியாத, ஒன்றேயாக இருக்கும் பொருளை எதனைக் கொண்டு பார்க்கிறாயோ, அந்த அறிவை 'சாத்விக அறிவு' என்று அறிவாயாக."

[இங்கு பரமாத்மாவின் சிறப்பு பேசப்பெறுகிறது. இந்த பரமாத்மா எல்லா அசையும், அசையா உயிர்களிடத்தும் உயிரின் உயிராக ஊடுருவி கலந்து உள்ளது. இந்த பரமாத்மாவிற்கு உயர்வு தாழ்வு என்ற பாகுபாடு கிடையாது. பரந்திருக்கும்போது எவ்வாறு ஆகாயம் பிளவுபடாது இருக்கிறதோ அவ்வாறு கூடுதல், குறைதல், அழிதல் என்ற நிலைகளை கடந்து உள்ளது. ஆகவே தனித்தனியாக பிரிந்து உள்ள உயிர்களிடத்து உள்ள பரமாத்மாவை எவன் 'ஒன்றுதான் அது, அதுவே எங்கும் எதிலும் உள்ளது' என்று அறிகின்றானோ அவனுடைய அறிவே சாத்விக அறிவாக விளங்குகிறது. இது வேற்றுமையில் ஒற்றுமை காண்பதாகும்.]

ப்ருதக்த்வேனது யஜ்ஞானம்
நானாபாவான் ப்ருதக்விதான் ।
வேத்தி ஸர்வேஷு தஜ்ஞானம்
வித்தி ராஜஸம் ॥ (21)

"(அடுத்ததாக) எல்லா பூதங்களிலும் வேறு வேறான பல ஜீவாத்மாக்களை ஒன்றிலிருந்து ஒன்று, வேறு வேறு விதமாகத் தனித்தனியாக உள்ளன என்று அறியும் அறிவே 'ராஜஸ அறிவா'கும்"



[இங்கு ஒற்றுமையில் வேற்றுமை பார்க்கப்படுகிறது. ஓர் உயிரின் உருவம், நிறம், ஒருவரின் பதவி, இனம், மொழி, பண்பு, குணம் கண்டு வேறு வேறு உயிர்களாக யார் ஒருவர் பார்க்கின்றனோ அவன் ராஜஸ அறிவை உடையவனாகக் கருதப்படுகின்றான். இங்கே அவனுடைய அறிவு மயங்கிய நிலையில் விளங்குகிறது. மேகம் மழை பொழிகிறது. மேலிருந்து கீழே விழும்வரை அதற்குரிய நிறம் ஒன்றுதான். பெயர் ஒன்றுதான், ஆனால் அந்நீரே பூமியில் விழுநதிடும் போது ஆறு, அருவி, குளம், ஓடை, ஏரி, கடல் என்று அந்த இடங்களைப் பொறுத்து பல நீர்நிலைகளாக பெயர் பெறுகின்றது. ஆனால் எல்லா இடங்களிலும் மழைநீர் ஒன்றே வியாபித்துள்ளது. அந்த வழியில்தான் எல்லா உயிர்களிலும் ஒரு ஆத்மாவே உள்ளது. இதனை அறியாதவன் அறிவு ராஜஸமாகின்றது.]

யத்து க்ருத்ஸ்வைதேகஸ்மின்
கார்யே ஸக்த மஹைதுகம் ।
அதத் வார்த்தவதல்பம் ச
தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ (22)

"(தான் செய்யும்) ஒரு செயலே சகலமும் என்று பற்றிக்கொண்டு, யுக்திக்குப் பொருந்தாததாகவும், உண்மைக்கு ஒத்து வராததாகவும், மிகவும் அற்பமானதாகவும் விளங்கிடும் அறிவே தாமஸ ஞானமாகும்."

[தன் மனத்திற்கும், தன் உடலுக்கும் எது இன்பம் அளிக்கின்றதோ அதுவே தனது வாழ்க்கையின் பயனாகக் கருதுவது தமோ குணத்தானின் இயல்பாகும். தன் மனைவியே, தன் குழந்தைகளே, தன் குடும்பமே தனது சகலமும் என்று கருதுவது, அவனுடைய மயக்க அறிவின் விளைவாகும். தனது உடலையே தனது ஆத்மாவாகக் கருதுவதும், தான் வழிபடும் திருவுருவங்களையே உண்மையான கடவுளர்களாகக் கருதுவதும் தமோ குணத்தின் இயல்பாகும். இது அவனுடைய அறிவின் கீழ்நிலையினையே குறித்திடும். இதுவே 'அற்பஞான'மாகும்.]

நியதம் ஸங்கரஹிதமராகத்
வேஷத: க்ருதம் ।
அபலப்ரேப்ஸுனா கர்மயத்தத்
ஸாத்விக முச்யதே ॥ (23)

"வினைப்பயனில் சிறிதும் ஆசை வைக்காத ஒருவனால் பற்று இல்லாது, விருப்பு, வெறுப்பு கொள்ளாது தனக்கென நியமிக்கப்பட்ட எந்த வினை மேற்கொள்ளப்படுகிறதோ அதுவே (அந்த வினையே) சாத்துவிக வினை என்று அழைக்கப்படும்"

[ஒரு தாய் தன் குழந்தைக்குப் பால் ஊட்டுவதிலோ, உணவு தருவதிலோ எந்தவித பயனையும் அந்த குழந்தையிடம் எதிர்பார்க்காது செய்யப்படும் ஒரு வினையாகும். அவள் அந்த வினையில் ஈடுபட்டாலும், பற்றுவைத்தாலும், அதில் அவள் எந்தவிதமான நன்றியினையோ, லாபமோ அக்குழந்தையிடமிருந்து எதிர்பார்ப்பதில்லை. அதனை தனக்குரிய இயல்பான ஒரு கடமையாகவே மேற்கொள்கிறாள். இதுவே சாத்துவிக வினையாகும். மேலும் ஒருவன் வினைகளை - கர்மங்களை - செயல்களை தனது வளர்ச்சிக்கேற்றவாறு மேற்கொள்கிறான். இங்கே அர்ச்சுனன் போர்க்களத்தில் தனது பொறுப்பினை உணர்ந்து விளைவுகளை எதிர்பார்க்காது, தர்மத்தைக் காப்பாற்ற வினைகளை மேற்கொள்ள வேண்டும் என்று பகவான் இங்கு அறிவுறுத்துகிறார். ஆகவே செய்வது 'தான்' என்ற நினைப்பை ஒழித்து, பயன் இன்னது விளையும் என்று எதிர்பார்க்காது செய்யும் வினையே சாத்துவிக வினையாகும்.]

யத்து காமேப்ஸுனா கர்ம
ஸாஹங்காரேண வாபுன: ।
க்ரியதே பஹுலாயாஸம் தத்ரபி
ஜஸமுதாஹ்ருதம் ॥ (24)

"ஆசையின் பாற்பட்டு அல்லது மமதை உணர்வுடன் எவன் ஒருவன் பெரும் முயற்சி மேற்கொண்டு வினைகளை மேற்கொள்கிறனோ, அந்த வினை(களே) ராஜச வினைகளாகும்."

[மனிதனுடைய ஆசைக்கு அளவில்லை. தன்னை, தன்னைவிட பொருளால், பதவியால், புகழால் மேலான ஒருவனுடன் ஒப்பிட்டுக்கொண்டு, உழைப்பை பின்னே தள்ளிவிட்டு, குறுக்கு வழியில் தன்னை மேம்படுத்திக்கொள்ளவே விழைகின்றான். இதனால் அவனுடைய ஆசை பேராசைக்கு வித்திடுகின்றது. அந்த பேராசையினை அடைந்திட பெரும் முயற்சிகளை மேற்கொள்கின்றான். அதற்காக தன் உடலை நன்றாகப் பேணிப் பாதுகாத்துக்கொள்கிறான். தான் தனது என்ற எண்ணங்கள் உருவாக வழி வகுத்துக்கொள்கிறான். இந்த உணர்வுகளைப் பின்னணியாகக் கொண்டு வேண்டியதைப் பெற வினைகளை மேற்கொள்கிறான். இவை யாவும் ராஜச .வினைகளாகும்.]

*அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமன*

*பேக்ஷ்ய ச பௌருஷம் ।*

*மோஹாதாரப்யதே கர்ம யுத்தத்*

*தாமஸ முச்யதே ॥ (25)*

"(செய்யும்) வினையின் விளைவு, அதனால் ஏற்படும் நஷ்டம், துன்பம், தன்னுடைய ஆற்றல் ஆகியவற்றைச் சிறிதும் எண்ணிப்பார்க்காது, (அறிவு) மயக்கத்தில் எந்த வினைகள் மேற்கொள்ளப் படுகின்றனவோ அவையாவும் தாமச வினைகளாகும்."

[புகழ், பொருள், பெயர், பெண் ஆகியவற்றிற்காக மனிதன் சிறிதும் சிந்திக்காது வினைகளை பலர் மேற்கொள்ளுதலை நாம் பார்க்கின்றோம். அதுபோது அவர்கள் எதிர் நோக்கிடும் சமுதாய, அரசியல், எதிர்ப்புகளையும் பார்க்கின்றோம். அவர்களது வீழ்ச்சிகளையும் காணுகின்றோம். இவையாவும் அம்மனிதன் மதிமயக்கத்தால், ஆசையின் அடிமையால் மேற்கொள்கின்றான். இவ்வினைகளை தன் உடலையும் உள்ளத்தையும் வருத்தி, தனது செயல் திறனைப்பற்றி சரியாக எடைபோடாது மேற்கொள்கின்றான். இங்கே அவன் தன் அறிவிற்கு மதிப்பினைத் தராது, தன் உணர்ச்சிகளுக்கே அடிமையாகின்றான். மேலும் இது போன்ற வினையாற்றல்களின் போது, ஒரு சிலரும் பாதிக்கப் படலாம் என்பதையும் மறந்து விடுகின்றான்.]

*முக்தஸங்கோ அனஹம்வாதீ*

*த்ருத்யுத்ஸாஹஸமன்வித: ।*

*ஸித்யஸித்யோர் நிர்விகார: கர்தா*

*ஸாத்விக உச்யதே ॥ (26)*

"பற்று வைக்காது, மமதையற்று, உறுதியும், ஊக்கமும், கொண்டு, வெற்றி தோல்விகளின்போது தன்னிலை இழக்காது வினையாற்றுபவன் எவனோ அவனே சாத்துவிக கர்த்தா ஆவான்."

[எல்லா உயிர்களிடத்தும் இறைவன் இருக்கின்றான் என்ற உணர்வுடன் எந்த வினைப்பயனிலும் பற்றுவைக்காது இருப்பவன் சாத்துவிகன் எனப்படுகிறான். தான், தனது என்ற மமதையற்று தன்னுடைய உடலையே இறைவன் இருக்கும் கோயிலாக எண்ணி, துன்பத்தின் போதும், மகிழ்ச்சியின் போதும், தன் உணர்ச்சிகளை கட்டுப்படுத்தித் தன் மனதை, அறிவை சமநிலையாக வைத்துக்கொள்பவன் சாத்துவிகன் எனப்படுகிறான். செய்யும் வினைகளின் மீது பற்று வைக்காது, தன் முயற்ச்சியில் அவன் நேர்மை, உழைப்பு, பொறுமை, ஊக்கம் ஆகியவற்றை ஒருமுனைப்புடன் செலுத்துகிறான்; வெற்றியை காணுகின்றான். அதனால் சமுதாயமும் பயனடைகின்றது.]

*ராகீ கர்மபலப்ரேப்ஸுர்லுப்தோ*

*ஹிம் ஸாதமகோ அசுசி: ।*

*ஹர்ஷசோகான்வித: கர்தா ராஜஸ:*

*பரிகிர்தித: ॥ (27)*

"ஆசைகொண்டு, வினைப் பயன்களின் மீது நாட்டம் கொண்டு, பேராசை உணர்வுடன், பிறரைத் துன்புறுத்திடும் மன இயல்புடன், தூய்மையற்று, மகிழ்ச்சிக்கும் துன்பத்திற்கும் எளிதில் ஆட்பட்டு வினையாற்றுபவன் 'ராஜச கர்த்தா' எனப்படுகிறான்."

*அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த:*

*சடோ நைஷ்க்ருதிகோ அலஸ: ।*

*விஷாதீ தீர்க்க ஸூத்ரீ ச*

*கர்த்தா தாமஸ உச்யதே । (28)*

"தனஞ்ஜயா! யோகத்திற்கு மாறுபட்ட மன இயல்புகொண்டு, அறிவு சரிவர வளரப்பெறுது. முரட்டுத்தனம் கொண்டு வஞ்சக மனதுடன், பழிவாங்கும் எண்ணத்துடன், சோம்பேறித் தனத்துடன், துயர உணர்வுடன், வீணே காலத்தைக் கழித்திடும் இயல்புடன் எவன் ஒருவன் வினைகளை மேற்கொள்கிறானோ அவனே தாமச கர்த்தா எனப்படுகிறான்."

[அடக்கமும், ஒழுக்கமும், சாதனமும் கொண்டு விளங்கும் மனத்தைக் கொண்டவனே சிறந்த யோகி ஆகின்றான். இப்பண்புகள் அற்றவன் தாமச வினைகளை புரியும் கர்த்தா ஆகின்றான். மேலும் இவன் அறிவு வளர்ச்சியற்றும், பணிவு இல்லாது திகழ்ந்திடும் முரடனாகவும், தனக்கு இடப்பட்ட வினைகளை செய்வதற்குரிய தன் உடல் ஆற்றலைப் பயன் படுத்தவிரும்பாது வாளா இருந்திடும் வஞ்சகனாகவும், தன் வினைகளை மேற்கொள்வதன் மூலம் பிறர்க்கு அவர்களிடையே பகைமையை தோற்றுவித்திடும் பழி உணர்வு கொண்டவனாகவும், இடப்பட்ட வினைகளை செய்யாது சோம்பித்திரிபவனாகவும், துன்பமோ, தோல்வியோ நேரிடின் உடனே மனத் தளர்ச்சி அடைபவனாகவும், எதனையும் காலக்கிரமத்தில் செய்யாது 'பிறகு செய்யலாம்' என்று காலத்தின் அருமை தெரியாது காலத்தைத் தள்ளிப்போடுபவனாகவும் விளங்கிடுவான். இத்தகு பண்புகளை உடையவனே 'தாமச கர்த்தா' என்றழைக்கப்படுகிறான்.]

*புத்தேர்பேதம் த்ருதேஸ்சைவ*

*குணதஸ்த்ரிவிதம் ச்ருணு*

ப்ரோச்யமானமசேஷேன
ப்ருதக்த்வேன தனஞ்ஜய ॥ (29)

“தனஞ்ஜயா! முக்குண வேற்றுமைகளின் தாக்கத்தால் புத்தியிலும் மன உறுதியிலும் ஏற்படும் மூன்று பிரிவுகளை, சிறிதும் மிச்சம் மீதி இல்லாமல் உனக்கு விவரிக்கின்றேன் கேட்பாயாக.”

[இங்கு அர்ச்சுனன் ‘திக்விஜயம்’ என்று மற்றைய அரசர்களை போரில் வென்று வரும் வேளையில் தேவலோகத்திலிருந்தும், பூலோகத்திலிருந்தும் பொன்பொருளையெல்லாம் வெற்றிகொண்டு தன் வசம் கொண்டு வந்ததால் ‘தனஞ்ஜயன்’ என்று பகவானால் விளிக்கப்படுகிறான். வினைகளை மேற்கொள்ளும்போது அறிவும், மன உறுதியும் பெரும்பங்கு வகிக்கின்றன. எது செய்யவேண்டும், எது செய்யக் கூடாது என்று பகுத்துப்பார்ப்பது அறிவின் இயல்பாகும். அதேபோன்று வினைகளை மேற்கொள்ளும்போது, செய்பவனின் மன உறுதிக்கேற்றவாறு வினைகள் முடிக்கப்படுகின்றன. இதனால் மேற்கொள்ளப்படும் வினைகளின் பயன்கள் மாறுபடுகின்றன. ராஜஸ, சாத்விக, தமோ மனங்களின் பின்னணிக்கு ஏற்ப அறிவும், மனஉறுதியும் மாறுபாடு கொண்டு விளங்கிடும். அவற்றை விரிவாக பகவான் அடுத்ததாக எடுத்தியம்ப உள்ளார்.]

(தொடரும்)

# வாமன அவதாரம்

திரு. என்.சி. கோபாலன் - சென்னை.

காஸ்யப முனிவருக்கு இரண்டு மனைவிகள். முதல் மனைவி பெயர் திதி. இரண்டாவது மனைவி பெயர் அதிதி. திதி மூலம் பிறந்தவர்கள் அஸுரர்கள்; அதிதி மூலம் பிறந்தவர்கள் தேவர்கள் தேவர்களின் தலைவன் இந்திரன். ஒரு தந்தை இரண்டு மனைவிகள் மூலம் பிறந்த குழந்தைகள் எந்த யுகத்திலும் அதிக பட்சமாக சண்டையிட்டுக் கொள்வார்கள். அதன்படி தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் அடிக்கடி சண்டை நடக்கும்.

ஒரு சமயம் அஸுரர்கள் மஹாபலி தலைமையின்கீழ் தேவர்களையும், தேவேந்திரனையும் ஓட ஓட விரட்டினார்கள். தேவேந்திரன் பதுங்க இடம் கூட இல்லாமல் மகாபலியிடத்து மிக பயம் கொண்டு மிக துன்பப்பட்டு கிடப்பதை தாய் அதிதி பார்த்து மனது மிக சங்கடப்பட்டாள். தன் மகனும், தனது வம்சமும் மிக நன்றாக வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டு, தனது கணவனான காஸ்யபரிடத்தில் முறையிட்டாள். காஸ்யபருக்கு எல்லோரும் பிள்ளைகளே. எவரிடமும் பாரபட்சம் காட்டாது யார் பக்கம் நியாயம் இருக்கிறது என்று யோசனை செய்து பார்த்தார்.

மந்திர பலத்தாலும், தந்திர பலத்தாலும், இந்திரனுக்கு பெரிய சேனையை திரட்ட அவர் உபாயம் சொல்லவில்லை. இந்திரன், மகாபலியை வென்று தன்னுடைய ராஜ்ஜியத்தை மீண்டும் பெற அவர் சூழ்ச்சி செய்யவில்லை. மாறாக, நியாயம் இந்திரன் பக்கம் இருப்பதால், பகவத் அனுகிரஹம் மூலம்தான் இந்த பிரச்சினைக்குத் தீர்வு காண இயலும் என்று எண்ணி, அவர் அதிதியை 'பயோ விரதம்' என்ற பூசையை செய்யச் சொன்னார். அந்த பூஜை மிகுந்த ஆசார அனுஷ்டானங்களுடனும், பன்னிரெண்டு நாட்கள் மனதை வேறு எதிலும் லயிக்காமல் ஸ்ரீமன் நாராயணனையே மனத்தால் நினைத்து, மனது ஒன்றுபட்டு செய்ய வேண்டும். தன் புத்திரர்கள் மீது இருக்கும் வாஞ்சையினால் தாயான அதிதி, அந்த பயோவிரதம் என்கிற பூஜையை மிக கவனத்துடன் செய்வதாக ஒப்புக்கொண்டு அவ்விரதமே செய்யலானாள்.

"புத்ரார்த்தி தர்ஸன
வஸாததிர்விஷ்ண்ணோ
தம் காஸ்யபம் நிஜபதிம்
ஸரணம் ப்ரபன்னா |
த்வத்பூஜனம் ததுதிதம் ஹி
பயோ வ்ரதாக்யம்
ஸா த்வாதஸாஹ மசரத்
த்வயி பக்தி பூர்ணா ||"
(ஸ்ரீமத் பாகவதம்)

என்ற ஸ்லோகத்தின்படி தன் கணவரின் ஆலோசனையினால் அதிதியானவள் பன்னிரெண்டு நாட்கள் 'பயோ விரதத்தை' அனுஷ்டித்தாள்.

இந்த பூஜையின் முடிவு நாளான பன்னிரண்டாம் நாள், மிகுந்த சந்தோஷமடைந்த மஹாவிஷ்ணு அதிதி முன் தோன்றி, 'உனக்கு மகனாக பிறப்பவனால உன்னுடைய பிரச்சினை தீரும்' என்று வரம் கொடுத்து மறைந்தார். தாயின் கஷ்டத்தை உணர்ந்த பகவான் வேறு யார் மூலமும் நிவாரணம் அளிக்காமல் தானே அதிதியின் கர்ப்பத்தில் புகுந்தார்.

"த்வம் காஸ்யபே தபஸி ஸன்னித
தத்தானீம்
பராப்தோஸி கர்பமதிதே: ப்ரணுதோ
விதாத்ரா |
ப்ராஸீத ச ப்ரகடவைஷ்ணவ
திவ்ய ரூபம்
ஸா த்வாதஸீ ஸ்ரவண
புண்யதினே பவந்தாம் ||"

காஸ்யபர் ஒரு தபஸ்வி. அவரும் அதிதியின் குழந்தைகள் மிக நன்றாக இருக்கவேண்டும் என்று விரும்பி, தவம் செய்ய ஆரம்பித்தார். இதனால் மகிழ்ந்த மஹாவிஷ்ணு, காஸ்யபரின் வீர்யத்தில் புகுந்து இரண்டு மாதம் கர்ப்ப வாஸத்தில் இருந்து, பின் அதிதியின் கர்ப்ப வாஸத்தில் பத்துமாதம் இருந்து பிராம்மண குழந்தையாக வெளிவந்தார். காஸ்யபர் என்ற பிராமணருக்கு குழந்தையாய் ஏன் பிறந்தார் என்றால், அக்காலத்தில் பிராம்மணர்கள் எல்லோரும் 'பிக்ஷம்' எடுத்து சாப்பிட வேண்டும். யாசகம் மூலம் வாழ்க்கை. இந்த குழந்தை பிரம்மச்சாரியாக மஹாபலியிடத்தில் யாசகம் கேட்க (பிக்ஷை) போகிறது.

அதனால் பிராம்மண குலத்தில் உதித்தார்.

இயற்கையின் தத்துவம், சாஸ்திரங்கள் விதி, புருஷ ஸ்திரீ சங்கத்தில் இருந்துதான், பிராஜா சிருஷ்டி ஏற்படவேண்டும். ஒரு சிசுவானது தந்தையின் கர்ப்பத்தில் (வீர்யத்தில்) இரண்டு மாதமும், தாயின் கர்ப்பத்தில் பத்துமாதமும் இருக்க வேண்டும். அதனால், காஸ்யபரின் வீர்யத்தில் இரண்டு மாதமும், அதிதியின் கர்ப்பத்தில் பத்து மாதமும் இருந்து பெருமாள் அவதாரம் எடுத்தார். தான் உண்டாக்கிய வேத சாஸ்திரங்களை தானே மீறவில்லை. ராமர் கோசலையின் கர்ப்பத்தில் 12 மாதங்கள் இருந்தார் என்று வால்மீகி இராமாயணம் கூறுகிறது. தசரதனிடம் ராமர், கர்ப்பவாஸம் இல்லை யக்ஞ புருஷன் அக்னியிலிருந்து வந்து கொடுத்த பாயாசத்தை உண்டதால் கௌசல்யா மொத்தம் 12 மாதங்கள் சுமந்து பெற்றாள்.

மேலும் ஸ்ரீபகவான் தன் வாக்குப்படி அதிதிக்கு மகனாக பிறந்ததைக் காட்ட சங்கு, சக்ரம் முதலிய ஆயுதங்களுடன், நான்கு கைகளுடனும் தோன்றி உண்மையான ஸ்வரூபத்தைக் காண்பித்து மனுஷ்ய ரூபத்தை பிறகு மேற்கொண்டார்.

ச்ரவண நக்ஷத்திரம் என்பது திருவோண நக்ஷத்ரமாகும். ஒவ்வொரு நக்ஷத்திரத்திற்கும் ஒரு தேவதை உண்டு. அதன்படி திருவோணத்திற்கு ஸ்ரீ மகா விஷ்ணு தேவதை. துவாதசியுடன் திருவோணம் சேர்வது மிக புண்ணிய தினமாகும். அந்த தினத்தில் மஹாவிஷ்ணு அதிதியின் மகனாக அவதரித்தார். பயோ விரதத்தை அதிதியானவள் பிரதமையில் ஆரம்பித்து துவாதசியில் பூர்த்தி செய்தாள். அந்த துவாதசியில் தான் (12 மாத கர்ப்பம் - 12ஆவது நாள் விரதம்) என்ற தினத்தில் பகவான் அதிதி புத்திரனாய் பிறந்து அவதரித்த இடம் 'சித்தாச்ரமம்' எனப்படும். அந்த இடத்தில்தான் விஸ்வாமித்ரர் தவமும் யாகமும் செய்தார்.



## சனிபகவான் வாகனத்தின் சிறப்பு இயல்புகள்

சனிபகவானின் வாகனம் காக்கை. பறவைகளில் சிறப்பான பண்பு கொண்ட பறவை காக்காதான். அதிகாலையில் எழுந்தும், மாலையில் கூண்டுக்கு திரும்பும் முன் குளித்தும், ஆண் பெண் என்ற பாகுபாடு இல்லாமல் கூடி உறவாடி வாழ்ந்தும், ஒற்றுமை எண்ணத்துடன் கிடைக்கும் உணவை உற்றார் உறவினர்களும் பெற கரைந்து கூடி உண்ணத்தொடங்கும். அப்பறவையைப் பற்றி மனித இனத்தில் வைத்துள்ள நம்பிக்கையை அடியில் கண்டவாறு சொல்லலாம்.

1. காக்கா கரைந்தால், அந்த வீட்டிற்கு விருந்தினர் அல்லது அவர்கள் விரும்பியவர்கள் வருவார்கள்.
2. காக்காக்கள் ஒன்றுக்கொன்று சண்டையிடுவதையை ஒருவர் கண்டால் அவரது குடும்பத்தில் பல பிரச்சனைகள் ஏற்படும்.
3. ஒரு வீட்டின் முன் பல காக்கைகள் கூடி, தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தால் அந்த வீட்டில் மரணம் ஏற்படும்.
4. ஒரு வீட்டில் தலைவாயில் வழியாக காக்கை வீட்டிற்குள் நுழைந்தால், குடும்பத்தாரைச் சனி பிடிக்கும்.
5. ஒருவருடைய தலையை காக்கை உரசி சென்றாலும், தாக்கிச் சென்றாலும் அது தீய சகுனம்.
6. காக்கை கரைவதாகவும், அது பறந்து செல்லுவதாகவும் கனவு கண்டால் அது தீதாகும்.
7. ஒருவர் தம் தலை மீது காக்கை பறந்து போவதாகக் கனவு கண்டால் அவரது ஆயுள் குறையும்.
8. இரண்டு காக்கைகள் பேன் பார்த்துக் கொண்டிருக்கும் காட்சியைக் கண்ட பெண்கள் கருவுறுவர்.
9. வலமிருந்து இடப்பக்கம் காக்கை போவது நல்ல சகுனம். ஆனால் இடமிருந்து வலப்பக்கம் போவது தீயசகுனம்.

திருமதி. இரா. தெய்வவீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## ம

மணக்கோலத்தே முளைதெளிவிப்பார் - கல்யாணத்தின் போது பாலிகையில் அங்குரார்ப்பணம் செய்விப்பார்

மணங்கொண்ட போகம் - நித்யோத்ஸவமான செவ்வியையுடைய செல்வச் சிறப்பு-அநுபவம்

மணத்தல் - கலத்தல்

மணத்தூண் - ஸ்ரீரங்கம் கோயில் அழகிய மணவாளன் ஸந்நிதியில் கர்ப்பகிரகத்திற்குப் பக்கலில் இருக்கும் இரண்டு தூண்களுக்குத் 'திருமணத் தூண்' என்று பெயர்; இது சந்தனமரத்தாலாகி மணம் வீசுவதால் இப்பெயர் பெற்றது என்பர். ஆமோத ஸ்தம்பர் என்றுர் பட்டர். ஆமோதம்-மணம்.

மணநீர் - வாசனைதிரவியம் சேர்ந்த நீர்

மணநோக்கமுண்டான் - மங்களமான நோக்கை உடையவன்

மணம் - பரிமளம்; கலியாணம்; இயற்கை; கைகோக்கை.

மணமலிவிழவு - கல்யாண குணங்கள் மேன் மேலுண்டாகிற திருநாள் அல்லது மணம்-கோக்கை, நெருங்கக் கோத்துக் கொண்டு சேவிக்கிற திருநாள்.

மணமாலை - மணமுள்ள மாலை

மணமிகுகலவி - ஸ்வயம்வரத்தில் உண்டாகும் கலவி

மணமுரசு - மங்கள வாத்தியம்

மணவீடு - மணல் சேர்க்கை

மணலொழிக்க - மணலே மிச்சமாம்படி

மணவாட்டிப் பெண் - மணுட்டுப்பெண்; மாட்டுப் பெண்; நாட்டுப்பெண்; மருமகள்

மணவாட்டிமார் - பத்தினிகள்

மணவாளப் பிள்ளை - கல்யாணப்பிள்ளை

மணவாளர் - அழகிய மணவாளப் பெருமாள்; ரங்கநாதன்

மணவாளீர் - மணவாளப்பிள்ளாய்

மணவிலக்கு - ஓர் அகத்துறை

மணுட்டி - மணுட்டியாவது பெண்மை கலைவாணி;

மணுட்டிமார் - மனைவிமார்; மனைவி களை மணுட்டி என்றதோடு பெண் சேர்த்து பெண் மணுட்டி என்பது பெம் னாட்டி என்றுயிற்று

மணுட்டுப்புறம் - திருமணமுறை; கல்யாண பிள்ளையாகச் செய்யும் அலங்காரம்

மணி - அழகு; பாறை; மயிர்முடி

மணிக்கதவம் - மாணிக்கக்கதவு; அழகிய கதவு

மணிக்காம்பு - நீலமணியாலே சமைந்த காம்பு

மணிக்குஞ்சி - ரத்தினக் கிரீடம் தரித்திருக்கிற தலைமயிர்

மணிக்கூடம் - திருமணிக்கூடம் என்ற திவ்ய தேசம்

மணிக்கோவை - இரத்தினமாலை

மணிகழுநீர் - மணிகளும் செங்கழுநீரும்

மணிச்சுட்டி - இரத்தின அலங்காரமான தலை அலங்காரம்

மணிச்சுடர் - மணியின் ஒளியாயிருப்பவன்

மணித்தடத்தடி - தெளிந்த குளம் போல் இருக்கிற திருவடி

மணித்தொத்தை - மணிமாலை

மணிப்பாறை - துளையில்லாத பாறை; வெறுங்கல்லாய் மண்பாடு இல்லாதது

மணிமண்டபத்தின்வார்த்தை - அரச சபையில் கூறும் சொற்கள்

மணிமாடக் கோயில் - திருநாங்கூர் திவ்ய தேசங்கள் பதினொன்றில் ஒரு திவ்ய தேசம்

மணிமாடம் - திருநறையூர் என்னும் திவ்ய தேசம்

மணிமாடநல் நடவாய் - திருநாவாய் என்னும் மலையாளத்தில் உள்ள திவ்ய தேசம்

மணிமாணிக்கச் சுடர் - மணி-நீலமணி, மாணிக்கம்-பத்மராகம், சுடர் இவைபோன்ற விக்கிரகம்

மணி மாணிக்கம் - பெருவிலையனான ரத்தினம்

மணிமாமை - நல்ல மாமை நிறம்
மணி மானம் - அவயவ சோபை
மணிமுத்தாறு - மணியும் முத்தும் நிறைந்த ஆறு-காவிரி.
மணிமுறுவல் - அழகான பல்வரிசை
மணிமேகலை - நவமணிகள் பதித்த அரை ஞாண்
மணிவயிறு - அழகிய வயிறு
மணியப்பன் - மணிபோல உதவி செய்பவன்; உப்பிலியப்பன் ஸந்நிதியில் உள்ள பஞ்ச பேரர்களில் ஒரு மூர்த்தி
மணியம் - உள்துறை அதிகாரம்
மணியகாரர் மணியாரர் - மணியம் பார்க்கிறவர்
மணியறை - மாணிக்கப்பாறை; ஸ்ரீரங்கம் கோயிலில் நெல்லுக் களஞ்சியத்துக்குப் பெயர். மணிநெல்லு மணியிரிசி என்று சொல்லுவர்.
மணியனார் - நீலமணிபோன்ற பெரிய பெருமாள்
மணியாரம் - நீலமணி ரத்தின மாலை
மணியிலணி நிறமாயன் - மணியைக் காட்டிலும் அழகிய நிறம் படைத்த மாயன்
மணி வணர் - மணிபோன்ற வடிவை உடையவர்
மணிவல்லி - அழகான கொடி
மணிவலை - கண்ணுகிற வலை. கண்ணுள் பாப்பா உண்டு. அதற்கு வலையின் கார்யம் உண்டு. அதாவது ஆளை இழுக்கும் வலையான மணிகள்-கண்வலை என்றபடி
மணிவளர்ச்சாரல் - மணியின் ஒளி எங்கும் ஒக்கப்பிரகாசிக்கிற சாரல்-பக்கபூமி
மணிவாய் முத்து - திருப்பவளத் திருமுத்து; பல்வரிசை
மணிவிளக்கு - மங்கள தீபங்கள்; ரத்ன தீபம்
மணைக்கட்டை - உட்காரும் மணையாகிற கட்டை
மணைநீராட்டுதல் - மணைக்கட்டைக்கு நீராட்டம் செய்வித்தல்; பெற்ற தாயிருக்க மணை வெந்நீராட்டுதிரோ என்பது வழக்குச்சொல். அதாவது மணைக்கட்டைக்கு வெந்நீரால் ஸ்நானம் செய்வித்து வைக்கிறீர்களோ? என்றபடி
மத்தகம் தலை
மத்த நன் நறுமலர் - மதகரமான (தேன் பெருக்குள்ள) நல்ல மணமுள்ள மலர்; மதமத்தம் பூ.
மத்தமாமலை - மத்தகஜங்களையுடைய பெரிய மலை (கோவர்த்தனமலை)
மத்தர் - மதித்தவர்; களித்தவர்.
மத்தணி - வாச்சியம்
மத்தளவும் தயிர் - மத்தாலே அவாவுதல்-கடைதல்-அளைந்து கடையும் தயிர்
மத்தளி - வாத்திய வகை; மத்தளம்
மத்துறு கடை- வெண்ணெய் - மத்தாலே உற்று-சிரமப்பட்டு கடைய வேண்டிய வெண்ணெய். கடைந்து எடுக்க வேண்டிய வெண்ணெய்
மதம் - கர்வம்; களிப்பு
மதமிகுசாரல் - யானையின் மதம் பாய்ந்து வெள்ளமிட்டபூமி
மதமதப்பு - திமிர்; உணர்வறுகை; செழிப்பு
மதமத்தப்பூ - ஊமத்தம்பூ
மதலை - பிள்ளை; குழந்தை; தூண்; மழலை
மதலைக்குழாம் - குழந்தைக்கூட்டம்
மதலைத்த - திரண்ட
மதலைத்தலை - தூண்மேலுள்ள சிறுதூண்; பிள்ளைதூண்தலை
மதனன் - களிப்பை விளைவிப்பவன்; காமன்
மதன் - மதம், செருக்கு
மதவு - பிள்ளை
மதாளித்துப் போனால் - தலைச்சாவி வெட்டப் போனால்-முற்றிப்போனால்
மதிக்கண்டாய் - புத்திபண்ணிக்கிடாய்
மதிக்க வினை செய்தார் - பெருக்கக்காரியம் செய்தார்
மதிக்கில் - பரிச்சேதித்துப்பார்த்தால்
மதிக்குடை - சந்திரனைப்போல் இருக்கிற வெண்கொற்றக்குடை
மதிக்கும்மானிடம் - மதித்திருக்கிற, கொண்டாடுகிற அபிமானித்திருக்கிற இம்மானிடம்
மதிகோள்விடுத்தல் - சந்திரனுடைய துன்பத்தைப்போக்கி அருளுதல்
மதிசூடி - சிவபிரான்
மதித்த - சந்தோஷப்பட்ட; வெகுமதி பண்ணின
மதித்தாய்போய் - மிகவும் ஸங்கல்பித்தான்
மதிப்பன் - நினைப்பேன்; பெரியவன்; இலவமரம்; ஞானி
மதிப்பு - மேன்மை; ஆதிக்கம்; எண்ணிக்கை
மதியஞ்சேர்சங்கு - சந்திரனைப்போன்ற சங்கு
மதியம் - சந்திரன்
மதியாம் - அறிவு உண்டாம்படி
மதியார் - உணராதவர்கள்
மதியில் மனம் - அறிவிலா மனம்

மதியுகுத்த - மதிபொகட்ட
மதியுரிஞ்சி - சந்திரனைக்கடந்து
மதிள்கோபுரம் - எல்லையான மதிளையுடைய கோபுரம்
மதுகரம் - வண்டு
மதுசூதன் - மதுஎன்னும் அசுரனைக் கொன்ற திருமாலுக்குப் பெயர்
மதுரக்கொழுஞ் சாறு - கொழுமதுரச்சாறு; மிகவும் இனிதான சாறு.
மதுரகவிகள் - நம்மாழ்வாரின் சீடர், கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தம் அருளியவர்
மதுரபோகம் - இனிமையான போகம்
மதுரவாறு - அழகான நதியைப்போன்றவன்
மதுரைப்புறம் - மதுரைக்கு அடுத்து உள்ள திருவாய்ப்பாடி
மதுரையார் மன்னன் - கண்ணன்
மந்தக்கோவை - மந்தம்-செறிவு; கோவை-மாலை. செறிந்த மாலை
மந்தமார்பொழில் - மந்தம்-மந்தாரம், மரங்கள்
மந்தமாருதம் - அளவுபட உலாவுகின்ற தென்றல்
மந்தமுழவு ஓசை - வாத்தியங்களின் மந்தமான ஓசை
மந்தரத்திழிந்த கங்கை - மந்தர மலையிலிருந்து வந்திழிந்ததாயிற்று கங்கை
மந்தாரம் - கற்பகம்
மந்தி - பெண்குரங்கு
மந்திரக்கோடி - மந்திரம் சொல்லிக்கொடுக்கும் கல்யாணப்புடவை
மந்திரக் கோடியுடுத்தல் - நிச்சியதார்த்தப் புடவையை அணிவித்தல்
மந்திரத்தினாரழல் - மந்திரம் சொல்லி வளர்க்கும் அக்நி
மந்திரப்படுதல் - மந்திரத்தால் கட்டுப்படுதல்
மந்திரம் - ஸர்வேச்வரன்; ஏகாந்தமும்
மந்திர மாமலர் - மந்த்ரபுஷ்பம் - மறை கொண்ட மந்திரமான புருஷஸூக்தாதிகள்; கையில் புஷ்பம், துளசி வைத்துக் கொண்டு வேதம் சொல்லி பெருமாள் திருவடிகளில் சமர்ப்பிப்பது.
மந்திர ரகசியம் - திருமந்திரம்
மந்திர வழக்காட்டம் - மனைவழக்காட்டம், மனை வழக்கு மந்திரம்-வீடு. வடமொழி
மந்திரவிதி - மந்திரத்தோடு கூடிய அநுட்டானம்
மந்திரித்து - விசாரித்து; ஆலோசனை பண்ணி; மந்திரம் ஜபித்து
மயக்கம் - கலவியும்; கூடலும்
மயக்கல் - செறிவு
மயக்கு - மயக்கத்தைச் செய்யும் பொருள்கள்; தெரியாச் செயல்; மாறுபாடு.
மயக்கு மயக்கு - மயக்கத்தால் மயக்குதல்
மயர்வு - அறிவின்மை
மயர்வறுத்தேனே - அறிவின்மையை அறுத்தேன்
மயல் - மையல் மயக்கம் கலக்கம்
மயல்மிகு பொழில்- பிரமிக்கச் செய்யும் பொழில்
மயிர்க்கத்தி - மயிரைப்போக்கும் கூர்மை மிக்க கத்தி
மயிர்க்குழி - மயிர்க்கூச்சின் பொருள்
மயிர்க்கூச்சு - புளகம்; மயிர்ககூச்சு போல் நிற்பது; மயிரின் கூச்சு, மயிர்க்குழி
மயிர்பாடு - மயிரின் விசேஷம்
மயிர்ப்பாடுண்டாய்த்து - மயிரினுடைய வைலக்ஷண்யம் தோற்றிற்று
மயிரும் முடி கூடிற்றில - மயிரும் சேர்த்து முடிக்கும் படி கூடவில்லை
மயிரெறிகை - மயிர்க்குச்சு
மயிலைத் திருவல்லிக்கேணி - மயிலாப்பூரைப் படைவீடாகக் கொண்ட திருவல்லிக் கேணி
மரக்கால் கூத்து - குடங்களை எடுத்தெறிந்து ஆடுவதொரு கூத்துப் போல மரக்கால்களை யெடுத்தெறிந்து ஆடுவதொரு கூத்துக்கு மரக் கால் கூத்தென்பர் சிலர்; மிக நீண்டதொரு கொம்பை நிலத் திலே நிறுத்தி அதன்மேலே கால்கட்டைவிரலை ஊன்றவைத்துக்கொண்டு அந்தரத்தில் ஆடும் கூத்து என்பர் காஞ்சீ ஸ்வாமி
மரங்கள் போல்வலிய வஞ்ச நெஞ்சனேன் - மரங்களைப்போலக் கடினமான நெஞ்சையுடையனாய் வஞ்சனையே தொழிலாக உடையவனாம்
மரத்தாலே - மத்தாலே
மரகதம - மரதகம் என்பது திரிபுச் சொல்; நீலமணி அல்லது பச்சை மணி என்பது பொருள்
மரணம் தோற்றம் - மரணமும் தோற்றமும்; பிறப்பும் இறப்பும்
மரணய மன்னுயிர்- மரணதர்மத்தையுடைய மனிதர்களின் ஆத்மா
மரதகச் சாயல்-மாமணிக்கல் - மரதகத்தின் ஒளியை உடைய நீலப்பாறை
மரம்பொத - மரத்தை பொத்தலாம்படி
மரமுலை - மரத்தால் செய்த முலை

| | | | |
|---|---|---|---|
| | ஆணுக்கு பெண் வேடத்தில் கட்டுவது | மருத்துவன் சுடினும் | வைத்தியன் சூடு போட்டாலும் |
| மரமெய்த மாமுனிவன் | - இராமன் | மருதஞ்சாய்த்தது | - அசுரர்களான இரட்டை மருத மரங்களை முறித்தது |
| மரவடி | - மரத்தால்செய்த பாதுகை-திருவடி | மருதர் | - மருத கணங்களான நாற்பத்தொன்பதின்மர் |
| மராமரம் | - ஸாலமரம் | மருதரும் வசுக்களும் | - மருத்கணங்கள் ஒன்பதின் மரும், எண்மர் வசுக்களும் |
| மரிய | - மரியும்படி; அழியும்படி | மருந்தம் | - மருந்து |
| மரு | - மருக்கொழுந்து | மருந்தீடுபட்டார் | - மயக்கமருந்து உண்டார் போலும் |
| மருக்கண்டு கொண்டு | - மருவிற்று; ஆசைப்பட்டு கண்டுகொண்டது | மருப்பு | - கொம்பு |
| மருகன் | - மருமகன்; மாப்பிள்ளை | மருபாடுருவுப்பாடி | - பின்னே உருவிப்போம்படி |
| மருகி | - மாட்டுபெண்; மருமகள் | மருவலர் | - பகைவர் |
| மருங்கு | - சமீபம்; அரையும்; அசலும்; இடை | மருவ வினியன் | - அனுபவிக்க அநுபவிக்க இனியன் |
| மருட்கள் | - இந்தளம் என்கிற பண் | மருவாத விடை | - ஒன்றோடொன்று சேராத காளைகள் |
| மருட்சி | - அறிவுக்கேடு | மருவாதார் | - ருசியில்லாதார்; ஆசிரியியாதார் |
| மருட்டு | - மருளப்பண்ணுகை | மருவார்புயல் | - மழைக்காலத்தில் உண்டான மேகம் |
| மருடியேலும் | - கலக்கம் வந்தாலும் | மருவாள் | - விரும்பமாட்டாள் |
| மருண்டு | - அறிவிழந்து | மருவுகை | - பொருந்துகை |
| மருத்தார் | - தேன் மாறுததார் -மாலை, மணம் மாறுத மாலை, மருவை-தேனை, மணத்தை உடைய தார்-மாலை | மருள் | - தெருள்; கலக்கம் |
| மருத்துவப்பதம் | - வைத்தியம் செய்யும் மருந்தின் பக்குவம் | மருள்பாடுதல் | - மயங்கும்படி ஒருவகைப் பாட்டைப் பாடுதல் |
| மருத்துவன் | - வைத்தியம் செய்பவன்; ஆசாரியன், ஸர்வேச்வரனே பெரிய வைத்தியன். 'வைத்யோ நாராயணோ ஹரி:' | மருளிந்தம் | - கானவிசேஷம் (இசை) |

(தொடரும்)

## தந்த சுத்தி விதிமுறை

வாகை, மா, வன்னி, கொன்றை, இலுப்பை, கடுக்காய், நாரத்தை, முதலியவற்றிலிருந்தும் துவர்ப்பு, கசப்பு, பால் முள்ளுடைய தக்க மரங்களிலிருந்தும், சிறுவிரல் அளவு பருமன் உடைய கோணுதல் இல்லாத நேர்க்குச்சிகளை எடுக்க வேண்டும். பின்னர் பற்களை உள்ளும், புறமும் நன்றாகத் தேய்த்து சுத்தம் செய்ய வேண்டும். பின் கொம்மை பிளந்து வில்லைப் போல் வளைத்து நாக்கைச் சுத்தம் செய்ய வேண்டும். பன்னிரண்டு தடவை தண்ணீரால் வாய் கொப்பளித்து இடப்புறத்தில் அதனை உமிழ வேண்டும்.

திதிகளில் அமாவாசை, பௌர்ணமி, பிரதமை, நவமியிலும் வார நாட்களில் ஞாயிற்றுக்கிழமை கொம்பொடிக்கக்கூடாது. அன்றைய தினம் துவர்ப்பு இலைகளால் பற்களில் கறைகளை நீக்க வேண்டும். இவ்விலைகள் கிடைக்காவிட்டால் பன்னிரு தடவை தண்ணீர் கொண்டு கொப்பளித்து தூய்மையைப் பெற வேண்டும்.

இக்குச்சிகளை எடுப்பதற்கு முன்பு, 'அந்த மரத்தைப் பார்த்து, உயர்ந்த மரமே! சந்திரபகவான் உன்னிடத்தில் உறைகிறர். ஆதலால் தீர்க்காயுள், புகழ், மக்கட்பேறு, அழகு ஆற்றல், செல்வம், அருள், தூய்மை, இரக்கம், நீதி, ஞான அறிவு இவைகளை எனக்கு தந்தருள என்னுடைய முகத்தைப் பார்ப்பாயாக! என சொல்லி வழிபடவேண்டும்.

திருமதி. இரா. தெய்வவீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

# ஸ்ரீகுமரகுருபரர் பாடல்களில் திருமால்

திரு. பஞ்சு. அரங்கநாதன் - ஸ்ரீரங்கம்.

## முன்னுரை :

கி.பி. பதினேழாம் நூற்றாண்டின் தலைசிறந்த தமிழ்க்கவிஞர் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள். இவர் காசியில் ஒரு சைவ மடம் நிறுவி வடநாட்டிலும் தமிழும் சைவமும் வளர்த்தவர். இவர் கந்தர் கலிவெண்பா முதலிய பதினான்கு நூல்களை அருளியுள்ளார். இவர் பாடல்களில் சிவபெருமானின் உயர்வு பெரிதும் கூறப்படுகிறது. சைவ சந்நியாசியாகிய இவர் சிவனைப் போற்றுவது இயல்பே. இருப்பினும் இவர் பிற தெய்வங்கள் பாலும் அன்புடையவர். திருமாலைப்பற்றி பல இடங்களில் புகழ்ந்து பேசுகிறார். ஒரு சிறிது இங்கு காணலாம்.

## குமரகுருபரர் வரலாறு :

திருநெல்வேலியை அடுத்து ஸ்ரீவைகுண்டம் என்ற விஷ்ணு தேசத்தில் கி.பி. 1650 சண்முக சிகாமணிக்கவிராயர், சிவகாம சுந்தரி அம்மாளுக்கும் மகனாகப் பிறந்தவர். பிறவி ஊமை. ஐந்தாம் வயதில் திருச்செந்தூர் முருகன் அருளால் பாடும் வரம் பெற்று கந்தர் கலிவெண்பா பாடினார். மதுரை மீனாட்சி மீது பிள்ளைத் தமிழ் பாடி அன்னையால் முத்துமாலை பரிசு பெற்றார். தருமபுர ஆதீன மாசிலாமணி தேசிகரின் சீடனாகி சைவ சந்நியாசம் பெற்றார். காசி சென்று முஸ்லிம் மன்னர் அன்பைப் பெற்று அங்கு "குமாரசாமி மடம்" நிறுவி சைவமும், தமிழும் வளர்த்தார். 14 நூல்களை அருளினார். கும்பகோணத்தையடுத்த திருப்பனந்தாளில் "காசிமடம்" நிறுவினார்.

## தசாவதாரம் :

திருமால் உலகில் தீயோரை அழித்து நல்லோரைக் காததிட பத்து பிறவி எடுத்த பெருமையை வைணவ நூல்கள் விரித்துக் கூறும். பிருகு முனிவர் சாபம் காரணமாக திருமால் பிறவி எடுத்தார் என்பது ஒரு கொள்கை. இதனை குமர குருபரரும் கூறுகிறார்.

"கோள் வாய்முனிவர்
சாபநீர்ப்பிறந்த"
[திருவாரூர் நான்மணிமாலை-
பாடல் - 17]

## சிங்கம் ஆகிய தெய்வம் :

பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன் பிரகலாதன் வாயில திருமாலின் ஓர் ஆயிரம் நாமங்கள் ஒள்ளிய வாகிப் போத ஆங்கு அதனுக்கு ஒன்று மோர் பொறுப்பிலனாகி பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண் புடைத்தான் இரணியன் என்ற அசுரன். தூணிலிருந்து பிறை எயிறு, அனல் விழி, பேழ் வாயோடு தெள்ளிய சிங்கம் ஆகிய தெய்வம் தோன்றி இரணியன் மார்பு பிளந்து அவன் மகன் பிரகலாதனுக்கு இன்னருள் கொடுத்தது. திருமாலின் தசாவதாரங்களுள் நரசிம்மம் நான்காவதாகப் புகழப்படுகிறது. குமர குருபரர் வாக்கினிலும் நரசிம்மர் இரண்டு இடங்களில் காணப்படுகிறார்.

"மானிட மடங்கல் தூண்
இடைத் தோன்றி
ஆடகப்பெயரின் அவுணன்
மார்பிடந்து
நீடு பைங்குடரின் நிணங்
கவர்ந்துண்டு"
(திருவாரூர் நான்மணிமாலை
பாடல்-5)

"பொன்தம்பம் சுமந்து ஈன்ற
மானிட விலங்கு"
[மீனாட்சி பிள்ளைத்தமிழ்-
அம்புலிப்பருவம்-பாடல்-7]

## ஓங்கி உலகு அளந்த வாமனர் :

மகாபலியின் வேள்வியில் ஒரு அந்தணச் சிறுவன் மூன்றடி மண் கேட்டான். தடுத்த சுக்கிரன் கண் அழிய மன்னன் நீர் தாரை வார்த்தான். தானம் பெற்றதும் மிகச் சிறு குறளன் விஸ்வரூபியாய் மண்ணை ஓரடியால் அளந்தான். எதிர்த்த மாபலி மகன் கமுசி வீழ்ந்தான். ஈரடியால் விண்ணை அளந்தான். மூவடியால் மாவலிக்கு முத்தி நல்கினான். குமர குருபரர் விஷ்ணுவின் தசாவதாரத்தில் ஐந்தாவதான வாமனரை பின்வருமாறு புகழ்கிறார்.

"பைந்துழாய்க்கேசவன் கால்வீச
அண்டகோளகைமுகடு கீண்டு"
[மீனாட்சி பிள்ளைத்தமிழ்
-ஊசற்பருவம்-7]

## ஜகம்புகழும் புண்யகதை

கற்பார் இராமனை அல்லால் மற்றும் கற்பரோ? என்றார் திருவாய்மொழியில் நம்மாழ்வார். பரதனும், தம்பி சத்துருக்கன

னும், இலக்குமனோடு மைதிலி யும் தொழநின்ற இராவண அந்தகன் எம்பெருமான் இரா மன். ஜகம்புகழும் இராமனை குருபரரும் புகழ்கிருர்.

"மீனேறுகுண்டு அகழ்நீவாய்
மடுத்த, தனி வில்லியார்"
(முத்துக்குமரன் பிள்ளைத்தமிழ்
-செங்கீரைப்பருவம்-5)

## கிருஷ்ணுவதாரம் :

ஓர் இரவில் ஒருத்தி மகனாய் பிறந்து அதே இரவில் ஒருத்தி மகனாய் வளர்ந்து கோகுலம் கொண்டாடி லீலைகள் செய்து கம்சன் அனுப்பிய அவுணரை அழித்துப் பின் கஞ்சனையும் வீழ்த்தி பாண்டவர்க்காக வாய் உரை தூது சென்று துரியோத னாதியர் நூற்றுவர் தம் பெண் டிர் நூல் இழப்ப பாரதப் போர் முடித்து பரீட்சித்தை மன்னன் ஆக்கி நின்ருன் கருமுகில் வண்ணன் கண்ணன். கிருஷ் ணுவதாரம் பற்றி பல இடங்க ளில் குமரகுருபர் பலபடியாகக் கூறுகிருர். சுவை மிகுந்த அச் செய்திகளைக் கீழே காணலாம்.

"ஆய்ப்பாடிப் பெருங்குடியில்
தீம்பால் திருடிக் கட்டுண்டு"
[முத்துக்குமரன் பிள்ளைத்தமிழ்
காப்புப்பருவம்-6]

"புள்வாய்கிழித்த தூவியம்பு"
(பறவையாய் வந்த
பகாசுரன் கதை)
[திருவாரூர் நான்மணிமாலை]

"விளங்கனி ஒன்றுஎறி
வெள்விடை"
(காசிக் கலம்பகம்-62)

[விளாமரமாக வந்த கபித்தா சுரன், பசுங்கன்ருய்வந்த வத் ஸாசுரன் கதை]

அனந்த சயனம்:- திருச்சி ஸ்ரீரங் கத்தில் இரு ஆறுகளுக்கிடை யில் பெருநதி ஒன்று குடதிசை முடியை வைத்து குணதிசை பாதம் நீட்டி வடதிசை பினபு காட்டி தென்திசை இலங்கை நோக்கி அரவு அணையில் அறி துயில செய்கிறது. அந்த அழ கினைக் கண்ட கண்கள் மற் ருென்றினைக் காணுது என்ருர் திருப்பாணுழ்வார். அரங்கனின் அனந்தசயனம் பற்றி குமரகுரு பரரும் கூறுகிருர்.

"அரவு அணையில் அறிதுயில்
அமர்ந்த கடவுளாய்
உலகம் காப்பதோ"
[பண்டாரமும்மணிக்கோவை-5]

"உலகு ஏழும் அளித்து
உண்டான் உறங்க"
[சகலகலாவல்லி மாலை-1]

## சொன்னவண்ணம் செய்த பெருமாள்:-

காஞ்சி திருவெஃகா புஜங்க சயனப்பெருமாளிடம் திரும ழிசை ஆழ்வார் "கணிகண் ணன் போகின்ருன் மணி வண்ணு நீயும் உன்றன் பைந் நாகப் பாய் சுருட்டிக் கொள்" என்றிட அவனும் ஆழ்வார் தமிழுக்கும், பக்திக்கும் அடி மையாகி அவர்பின் சென்ருன். யதோக்காரி என்ற பெயரும் பெற்ருன். இந்த அற்புதம் கும ரகுருபரர் வாக்கிலும் பதிவா யிற்று.

"பழமறைகள் முறையிடப்
பைந்தமிழ்ப்
பின்சென்ற பச்சைப்
பசுங்கொண்டலே"
[மீனாட்சி பிள்ளைத்தமிழ்-
-காப்புப்பருவம்-1]

## ஸ்ரீதேவி, பூதேவி இடங்கள்:-

திருமாலின் தேவியருள் இரு வர் இன்துணைப் பதுமத்து மலர்மகளும், நற்புவித்தாயும் ஆவர். திருமகள் இறைவன் திருமார்பிலும், பூமகள் திருத் தொடையிலும் வாசம் செய்வர் என்பது வைணவ மரபு. இத னையே பின்பற்றி குமரகுருப ரரும் கூறுகிருர்.

"பணிகொண்டமுடிச்சென்னி
அரங்காடும் பைந்தொடியும்
கஞ்சத்தஞ்சாயற்று திருந்திழையும்
. . . . . . . . . . . . . .
மனைக்கிழவன்
திருமார்பு, மணிக்குறங்கும்"
(மதுரைக்கலம்பகம்-2)

## முடிவுரை :

சுமார் 800 பாடல்களை அரு ளியுள்ள தெய்வக் கவிஞர் கும ரகுருபரர். சொல் இன்ப மும் உவமைகளும், ஓசைநயமும் நிறைந்து விளங்குவன இவரது பாடல்கள். எல்லா தெய்வங்களி டமும் அன்பு கொண்டு காழ்ப் பின்றி பாடியவர் இவர்.

அனைவரும் குமரகுருபரர் கவிதைகளைக் கற்று தமிழ் இன் பம் நுகர வேண்டுகிறோம். ✽

## மதிப்புரை

நூற்பெயர்: கம்பர் வாழ்க்கை வரலாறு. ஆசிரியர்: டாக்டர் மா. வரதராசன், மங்கையர்க்கரசி பதிப்பகம், 109, அம்மங்கார் தெரு, காஞ்சிபுரம்- 631 503 விலை: ரூ. 50/-

உலக மகா காவியங்களுள் தன்னேரில்லாது நிமிர்ந்து நிற்பது கம்பனின் காவியம். ஒப்பற்ற இக்காவியத்தை உலகுக்களித்த கம்பனின் வாழ்க்கையை அறிவதற்கு ஏற்றதொரு நூல் இன்று வரை இல்லை.

எனினும், இன்றுவரை கிடைத்திருக்கும் செவிவழிக் கதைகளும், செய்திகளும் ஆராய்ச்சிக்கு அடிப்படைகளாகா! இவற்றை முழுமையாக ஒப்புக்கொள்ளவும் முடியாது; தள்ளவும் முடியாது. கம்பர் வாழ்க்கையை அறிவதற்கு இரண்டு ஆதாரங்கள் துணை புரியும், கம்பரைச் சடையப்ப வள்ளல் ஆதரித்தார் என்பது ஒன்று! கம்பனைச் சோழ மன்னன் ஒருவன் இராமகாவியம் பாடப்பணித்தான் என்பது மற்றொன்று!

சடையப்பவள்ளலின் காலம், வாழ்க்கை ஆகியவற்றை ஆராய்வதன் மூலம் கம்பரின காலமும் வாழ்வும் ஓரளவு அறியப்படும். அதுபோலவே, கமபரை ஊக்கப்படுத்திய - ஆதரித்த- பாராட்டிய சோழ மன்னன் யார்? அவன காலம் யாது? அவனின் வாழக்கை நிகழ்ச்சிகள் யாவை? என்பவற்றை ஆராய்ந்து தெளிதல மூலமும் கம்பரின் வாழ்க்கை வரலாற்றை ஓரளவு அறியலாம்.

கம்பரின் வாழ்க்கை வரலாறு இன்று வரை சிறு சிறு கட்டுரைகளாகவும், சிறு நூல்களாகவுமே காணக்கிடைக்கின்றன. ஆராய்ச்சி அறிஞர் பலரும் இம்முயற்சியில் ஈடுபட்டுத் தங்கள் கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.

இம்முயற்சியில் தம்மை முழுவதுமாக ஈடுபடுத்திக் கொண்டு வெற்றியும் பெறத்துடிக்கிறார் திரு. மா. வரதராஜன். 'கம்பர் வாழ்க்கை வரலாறு' என்னும் தம நூலில் பல்வேறு கோணங்களில் ஆராய்கிறார். வரலாற்றுச் சானறுகள், தமிழ் நாவலர் சரிதை, விநோதரச மஞ்சரி, அபிதான சிந்தாமணி முதலான பல்வேறு நூல்களின் துணைகொண்டு உண்மையைக் கண்டறிய முயன்றிருக்கின்றார்.

கம்பராமாயணப் பாடல்களும், கம்பர் இயற்றிய பிற நூல்களும் கூட இவருக்குக் கைகொடுத்திருக்கின்றன. கம்பரின் வாழ்க்கை வரலாற்றைக் கதை சொல்லும் போக்கில் ஆக்கியிருப்பது நூலாசிரியரின் மதிநுட்பத்தை வெளிப்படுத்துவதாக உள்ளது.

ஆழமான ஆராய்ச்சி, உண்மையைக்காண்பதில் தெளிவு, கற்பவர்க்குச் செய்திகளைக் கொடுத்திருக்கும் பாங்கு, உழைப்பின் மாட்சி ஆகியன மிளிரும் இந்நூல் தமிழுலகுக்குக் கிடைத்த ஒரு மாபெரும் செல்வம்!

கம்பனின் வாழ்க்கையையும், காலத்தையும் அறிய விரும்புவர்க்கு முயன்று, உழைத்துத் தேடித்தந்த பெருஞ்செல்வம் "கம்பர் வாழ்க்கை வரலாறு" என்னும் நூல், கம்பரைப் பற்றி அறியத் துடிப்பவர் இந்நூலாசிரியரைப் பெரிதும் போற்றுவர் என்பது முக்காலும் உண்மை.

'வாழ்க ஆசிரியரின்
தமிழ்த்தொண்டு'

-சுப்பு பார்த்திபன்.

***

## மக்களுட்பதடி

இல்வாழ்க்கையில் இருப்பவன தாய், தந்தை, குரு, மனைவி, மகன், விருந்தாளி, வழிபாடு செய்வோன், அிதிதி, ஓமாக்கினி ஆகிய ஒவ்வொரு பேர்களையும் தினமும் காப்பாற்றவேண்டும். அவ்வாறு செய்யத் தவறியவரை 'மக்களுட்பதடி' என்று அழைக்கப்படுவான்.

"குரவனைத் தாயைத் தந்தையை மனையைக்
குற்றமில் புதல்வனை விருந்தை
இரவுநண் பகலும் வழிபடு வோனை
யதிதியை யெரியினை யீங்கு
கருதுமொன் புதின்மர் தம்மையு நாளுங்
கருணைகூர்ந் தினிதளித் திடாது
மருவுமில் வாழ்க்கை பூண்டுளோன் றன்னை
மக்களும் பதடியென் றுறைப்பர்."

-காசிகண்டம்

இரா. தெய்வ வீர லெக்ஷ்மி - தூத்துக்குடி.

Edited and Published on behalf of T T Devasthanams by N.S Rama Murthy, M.A , and Printed at T.T.D. Press by M. Lakshmana Rao, B A , L P.T., Manager, T.T D Press, Tirupati - 517 507



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 120/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 120/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | ஒருவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 620/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 620/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 420/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |
| | **வாராந்திர சேவைகள்** | | | | |
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |
| | **வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்** | | | | |
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் (உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி) | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589

